

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 11 June 2024 Rs.30
ஆண்டு 18 இதழ் 11 ஜூன் 2024 ரூ.30

### படைப்பாக்கச் செயல்பாடுகளில் பெண்கள் ஈடுபடுவது இப்போதும் சாத்தியமில்லாததாகவே இருக்கிறது!

Promising Young Woman எமரால்டு ஃபெனெல், கேரி முல்லிகன் நேர்காணல்

### இளையராஜாவின் போராட்டம்

பிரபு திலக்

# இராசேந்திர சோழன் கதைகளில் பெண்ணுடல்கள்

அதிர்ச்சி தரும் பாலியல் மீறல்களை கதைக் கருவாக கொண்டிருக்கும் இராசேந்திர சோழன் கதைகளின் பெண் பாத்திரப் படைப்புகள், அவர் பெண்களைப் புரிந்துகொள்ளவில்லை என்பதையே வெளிப்படுத்துகிறது - புதிய மாதவி.

ஆண்டு 18 இதழ் 11



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜுன்-2024 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

* அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# இளையராஜாவின் போராட்டம்!

## பிரபு திலக்

ஒரு படைப்பாளியாக தன் படைப்பின் மீதான உரிமையை நிலை நாட்டுவதற்கு போராடி வருகிறார் இளையராஜா. இதற்காக பேராசைகாரர், கர்வமானவர், திமிர் பிடித்தவர் என்றெல்லாம் கடுமையான விமர்சனங்களை சந்தித்து வருகிறார். இந்த விமர்சனங்கள் எல்லாம் சரியானதுதானா?

இளையராஜா வழக்கு காரணமாக திரைப்படப் பாடல்களின் காப்புரிமை ஒரு விவாதப் பொருளாக மாறியுள்ளது. காப்புரிமை என்றால் என்ன? அது திரைப்படத் துறையில் எப்படி இயங்குகிறது? அதற்கான சட்டங்கள் என்ன? உண்மையில் இசை யாருக்குச் சொந்தம்? என பல கேள்விகள் முன்வைக்கப்பட்டு விவாதிக்கப்படுகின்றன.

இளையராஜா 1976ஆம் ஆண்டு தனது இசைப் பயணத்தைத் தொடங்கினார். இதுவரை பல்வேறு மொழிகளில் ஏழு ஆயிரத்திற்கும் அதிகமான பாடல்களுக்கு இசையமைத்துள்ளார். இந்தப் பாடல்கள் பொது நிகழ்ச்சிகள் தொடங்கி வணிக ரீதியாக நடத்தப்படும் கச்சேரிகள் வரை எல்லா இடங்களிலும் எந்த முன் அனுமதியும் பெறாமல், அதற்கான உரிமைத் தொகை செலுத்தப்படாமல் அனைவராலும் பயன்படுத்தப்பட்டு வந்தது. சமீபத்தில் வெளியான 'மஞ்சுமெல் பாய்ஸ்' மலையாள படத்தில், 'குணா' படத்துக்கு இளையராஜா இசையமைத்த பாடல்களை பயன்படுத்தியது போல், பல்வேறு திரைப்படங்களிலும் இளையராஜா பாடல்கள் பயன்படுத்தப்பட்டு வந்தது.

இந்நிலையில் கடந்த 2019 ஆம் ஆண்டு எக்கோ, அகி உள்ளிட்ட இசை நிறுவனங்கள் தாம் இசையமைத்த 4,500 பாடல்களை அனுமதி இல்லாமல் பயன்படுத்தி வருவதாகவும், அதற்குத் தடை விதிக்க வேண்டும் என்றும் இளையராஜா வழக்குப் பதிவு செய்தார். இந்த வழக்கில் முதலில் படத் தயாரிப்பாளரிடம் உரிமம் பெற்ற இசை நிறுவனங்கள் பயன்படுத்தத் தடை இல்லை என்றும், அதேநேரம் அதன் மீது இளையராஜாவுக்கும் தார்மீக உரிமை உள்ளது என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.



அதன்பிறகு இளையராஜா இந்தத் தீர்ப்பை எதிர்த்து மேல்முறையீடு செய்தபோது, இந்த நிறுவனங்கள் அந்த பாடல்களைப் பயன்படுத்த இடைக்கால தடை விதிக்கப்பட்டது. இதை எதிர்த்து இசை நிறுவனங்கள் தரப்பில் மீண்டும் மேல்முறையீடு செய்யப்பட்டு தற்போது இருதரப்பின் வழக்கு விசாரணையும் உயர்நீதிமன்றத்தில் நடைபெற்று வருகிறது.

இதனிடையே இளையராஜா அவரது நீண்டகால நண்பரான பாடகர் எஸ்.பி. பாலசுப்ரமணியம், பாடகர்கள் சித்ரா, எஸ்.பி.பி. சரண் ஆகியோர் தனது பாடல்களை வணிக நோக்கில் மேடைகளில் பாடக்கூடாது என்றும் வழக்கறிஞர் மூலம் கேட்டுக்கொண்டார். அந்தப் பிரச்னை அதற்குப் பின் சமரசத்தில் முடிந்தது.

இதுபோல், 'மஞ்சுமெல் பாய்ஸ்' உட்பட தனது இசையை பயன்படுத்தும் பட நிறுவனங்களுக்கு எதிராகவும் இளையராஜா வழக்கறிஞர்கள் மூலம் நடவடிக்கை எடுத்து வருகிறார்.

தற்போது இந்த விவகாரத்தில், ஒரு தயாரிப்பாளரிடம் சம்பளம் பெற்றுவிட்டு இசையமைத்துக் கொடுக்கும் இசையமைப்பாளருக்கு அதற்குப் பின் அந்த இசையின் மீது எந்த உரிமையும் இல்லை என்ற வாதம் முன்வைக்கப்படுகிறது.

இது சட்டபூர்வமாக எந்தளவுக்கு உண்மை? காப்புரிமை சட்ட விதிகள் சொல்வது என்ன?

'காப்புரிமை' என்பது கலைஞர்களுக்கும் அவர்கள் படைப்புகளுக்குமான வணிகப் பாதுகாப்பை உறுதி செய்கிற ஒரு விஷயம். இந்த 'காப்புரிமை' என்கிற கோட்பாடு நமக்கு மேற்கத்திய உலகிலிருந்து வந்ததுதான். அதனடிப்படையில் இந்தியாவில் தனிநபர் ஒருவரின் படைப்பு அல்லது கண்டுபிடிப்பு மீதான அவரது உரிமையைப் பாதுகாக்கும் நோக்கத்தில் காப்புரிமை சட்டம் 1957 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. இந்தச் சட்டப்படி ஓவியர்கள், இசைக் கலைஞர்கள்,



கவிஞர்கள், எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளை பதிவு செய்ய வேண்டும் என்று அவசியமில்லை. ஒருமுறை அவர்கள் படைப்பு வெளியிடப்பட்டு விட்டாலே அது அவர்களுக்கு மட்டுமே சொந்தம். இதில் மறு கேள்விக்கே இடமில்லை. ஓவியம், கதை, கவிதை ஒரு இதழில் வெளியாகி, அதற்காக அவர்கள் அந்த நிறுவனத்திடம் இருந்து சன்மானம் பெற்றிருந்தாலும், அந்த படைப்பின் மீதான உரிமை படைப்பாளிக்கே சொந்தம். வேறு யாராவது அதை பயன்படுத்த வேண்டும் என்றால் படைப்பாளியிடம் அனுமதி பெறவேண்டும்.

ஆனால், திரையிசையைப் பொறுத்தவரைக்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் நம் நாட்டுக்கும் உள்ள வேறுபாடு காப்புரிமை தொடர்பான குழப்பங்களுக்கு ஒரு காரணமாக அமைந்துவிட்டது. மேற்கத்திய நாடுகளில் இசை என்பது தனித்து நிற்பது. மிக அபூர்வமாகவே திரைப்படங்களில் பாடல்கள் இடம்பெறும். ஆனால், இந்தியாவில் பாடல்கள் திரைப்படங்களின் ஊடாக இணைந்திருக்கிறது. இந்த மாறுபாடு பல முரண்களைக் கொண்டு வந்திருக்கிறது. இதனாலேயே, திரைப்படங்களுக்கு இசையமைப்பாளரால் உருவாக்கப்பட்ட பாடல்கள் யாருக்கு சொந்தம் என்பது விவாதப் பொருளாகியுள்ளது.

"ஒரு இசையமைப்பாளர் தனி ஆல்பமாக உருவாக்கி இசையமைக்கிறார், அதை வெளியிடுகிறார் என்றால் அது முழுக்க முழுக்க அவருக்கே சொந்தம். ஆனால், ஒரு தயாரிப்பாளர் குறிப்பிட்ட படத்தின் தன்மைக்கு ஏற்ப தனக்கு இத்தகைய பாடல்கள் வேண்டும் என்று கேட்டு, அதற்காக ஒரு குறிப்பிட்ட பணத்தை சம்பளமாகப் பெற்றுக்கொண்டு, ஒப்பந்தத்தின் அடிப்படையில் இசையமைப்பாளர் இசையமைத்துக் கொடுக்கும் நிலையில் அந்த இசையின் மீதான மொத்த உரிமையும் தயாரிப்பாளருக்கே சொந்தம். ஒரு திரைப்பட பாடல் குறிப்பிட்ட இசையமைப்பாளரை மட்டும் சார்ந்தது கிடையாது. அதில் சவுண்ட் இன்ஜினியரில் தொடங்கி, பாடலாசிரியர் உள்ளிட்ட பலரும் பங்கு செலுத்துகிறார்கள். இதனால், ஒவ்வொருவரிடமும் ஒப்பந்தம் போட்டு அதன் அடிப்படையில்தான் அந்தப் பாடலை ஒரு தயாரிப்பாளர் தயாரிக்கிறார்" என்ற வாதம் முன்வைக்கப்படுகிறது.

ஆனால், இளையராஜா வழக்கில் அவரது தரப்பில் வாதாடிய வழக்கறிஞர் குழு, குறிப்பிட்ட ஒரு படத்திற்காக இசையமைக்கப்பட்ட ஒரு பாடல் வீடியோ காட்சிகளோடு இணைக்கப்பட்டு வெளியாகிறது. அதன் மீது மட்டுமே அந்த தயாரிப்பாளருக்கு உரிமை உண்டு. அதை ஆடியோ போன்று வேறு எந்த வடிவத்திலும் வெளியிட உரிமை கிடையாது என்கிறார்கள்.

அதாவது, "ஒரு படத்துக்குப் போடப்பட்ட இசையை வணிக நோக்கில் வேறு படங்களிலோ அல்லது இசைக்கச்சேரிகளிலோ பயன்படுத்தும்போது குறிப்பிட்ட தயாரிப்பாளரோ அல்லது அதை செய்யும் இசை நிறுவனமோ அதற்குரிய உரிமைத் தொகையை அந்த இசையமைப்பாளருக்குக் கொடுக்க வேண்டும். அந்தத் தொகையை நிர்ணயிக்கும் உரிமை அதன் படைப்பாளியாக இசையமைப்பாளருக்கு மட்டுமே உண்டு" என்கிறார்கள்.

இந்த வாதம் சரியானதாகத்தான் படுகிறது.

திரைப்பட பாடல்கள் காப்புரிமை தொடர்பாக நமது சட்டங்களில் திருத்தங்கள் செய்தாக வேண்டியதன் அவசியத்தையே இந்த விவகாரம் உறுதிபடுத்துகிறது. குறிப்பாக பலர் குறிப்பிடுவது போல் திரைப்பட இசையையும் தனி இசையையும் இரண்டாகப்பிரித்துசட்டத்திருத்தம்செய்யவேண்டும்.

வேறு எந்த இசையமைப்பாளரையும் விட எளிமையான, இசையைத் தவிர எந்த வியாபார நுணுக்கமும் தெரியாத வெள்ளந்தி மனிதராகத்தான் தொடக்க காலங்களில் இளையராஜா இருந்தார். அதுதான் இன்றைய அவரது போராட்டங்களுக்கு காரணம். அவரது படைப்புகளை வைத்து யார் யாரோ கோடிகளில் சம்பாதிப்பதைப் பார்த்த பிறகுதான் சுதாரிக்க முயன்றார். ஒரு படைப்பாளியாக தன் படைப்பின் மீதான உரிமையை நிலை நாட்டுவதற்கான போராட்டத்தில் அவர் சம்பாதித்துள்ளது பேராசைக்காரர், கர்வமானவர், திமிரானவர் என்ற பட்டங்களையே. இது துரதிஷ்டமானது.●

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

# 1957
## ஆல்பெர் காம்யு
# ஒரு படைப்பாளியின் பங்கு
### தமிழில்: ஸிந்துஜா

என்னுடைய தனிப்பட்ட தகுதிகளைக் கடந்து அளிக்கப்பட்ட பரிசு என்று நான் நினைக்கும் அதே பொழுதில் உங்களுடைய சுதந்திரம் மிக்க அகாதெமி என்னைக் கௌரவிப்பதற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வலிமையான காரணங்களுக்காக ஒவ்வொரு மனிதனும், குறிப்பாக ஒவ்வொரு கலைஞனும் அங்கீகாரத்தை விரும்புகிறான்; நானும்கூட. ஆனால், இந்தப் பரிசு என்னைப் போன்ற ஒருவனுக்கு அளிக்கப்பட்டது பலமான எதிர்விளைவுகளை ஏற்படுத்தும் என்ற நிலையில் இதை எனக்கு அளிக்கத் தூண்டியது எது என்று என்னால் ஊகிக்க முடியவில்லை. மெதுவாக விரிந்து வரும் படைப்புலகின் பிரதிநிதி, சந்தேகங்களையே பெரும் செல்வமாகக்கொண்டவன், எழுத்துடன் தனிமையில் வாழ்பவன் அல்லது பின்வாங்கும் நண்பர் குழாத்தை உடையவன் என்றிருக்கும் ஒரு மனிதன், திடீரென்று ஒரு மாபெரும் வெளிச்சத்தின் முன்பாக நகர்த்திக்கொண்டுவரப்பட்டால் அவனுடைய தத்தளிப்பு எத்தகையதாக இருக்கும்? ஐரோப்பாவில் உள்ள மற்ற படைப்பாளிகள், அவர்களுக்குள் உள்ள சில உன்னதமான எழுத்தாளர்கள் மௌனத்தில் வதைபட்டுக் கிடக்கும் போது, அவனுடைய தாய்நாடு முடிவற்ற





கொடும் ஏழ்மையில் வாடும்போது, இந்தப் பெருமையை எத்தகைய உணர்ச்சிகளுடன் அவனால் ஏற்றுக்கொள்ள முடியும்?

நான் அந்த அதிர்ச்சியையும் உள்ளக் கொந்தளிப்பையும் உணருகிறேன். அமைதியைத் திரும்பப் பெற, சுருங்கச் சொல்வதென்றால் இந்தப் பெருந்தன்மை மிக்க அதிர்ஷ்டத்துடன் கைகுலுக்க விரும்புகிறேன். ஆனால், இதுவரை சாதித்ததின் மீது மட்டும் அமர்ந்துகொண்டு நான் இளைப்பாற முடியாது. எனக்கு உதவும் எதையும் நான் காணவில்லை எனினும் ஒரு படைப்பாளியாக என் எழுத்தும் கலையும் மிகுந்த உளைச்சளைத் தரும் சூழ்நிலைகளில் இருந்து என்னைக் காப்பாற்றியிருக்கின்றன. நன்றியுடனும் நட்புடனும் இதைப் பற்றி எளிமையாகக் கூற முயலுகிறேன்.

என்னைப் பொறுத்தவரை என் கலை இல்லாமல் என்னால் உயிர் வாழ முடியாது. ஆனால், அது எல்லாவற்றையும் விட உயர்ந்தது என்று நான் கருதவில்லை. மாறாக அது எனக்கு மிகவும் தேவையானது, ஏனெனில், என் தேசத்தவருடன் அது என்னைப் பிணைத்து வைத்திருக்கிறது. அது என் வாழ்க்கையை உருவாக்கி, அவர்களுடன் என்னை இணைத்து,என்னை வாழவைக்கிறது.இன்பங்களையும் துன்பங்களையும் பெரும் திரளான மக்கள் உய்த்துணர அது வழிகோலுகிறது. அது கலைஞனை ஒதுக்கித் தனித்து நிற்கும் நிலையைத் தவிர்க்கிறது. மாறாக அது அகண்ட உலகில் பரவிக் கிடக்கும் எளிமை நிறைந்த சத்தியத்தைத் தரிசிக்க உதவுகிறது. ஒரு கலைஞனாகத் தன் வாழ்க்கையைத் தீர்மானித்து, அதன் காரணமாகத் தான் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டவன் என்று நினைப்பவனுக்கு அவனோ அவனது கலையோ அப்படிப்பட்டதில்லை - அவன் மற்றவர்களுடன் தன்னைப் பொருத்திக் கொள்ளாதவரை - என்று உணர வைக்கிறது. சக மனிதர்களும் அவனும் அவர்கள் சார்ந்திருக்கும் சமூகத்தின் நித்திய அழிவற்ற அழகைக் கண்டு அவன் தன்னை அதனுடன் பொருத்திக்கொள்கிறான். அதனால்தான் உண்மையான கலைஞர்கள் எதையும் இகழ்ச்சியுடன் நோக்குவதில்லை. அவர்கள் எதைப் பற்றியும் தீர்ப்பளிப்பதை விட அவற்றை அறிந்து புரிந்துகொள்வதில் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள். அப்படியே அவர்கள் சார்புடையவர்களாக இருக்க விரும்பினால் அவர்கள் சார்ந்திருக்க வேண்டியது அவர்களுடைய சமூகத்தைத்தான். நீட்சே உதிர்த்த பொன்மொழியைப் போல ஒருவன் தொழிலாளியோ பெரும் மேதையோ அவன் கொள்ளும் கருத்து: சமூகத்தை ஆள்வது நீதிபதியல்ல, படைப்பாளியே.



இந்த அடிப்படையில் பார்க்கும்போது ஒரு படைப்பாளியின் பங்கு என்பது கஷ்டமான பொறுப்புகளிலிருந்து விடுபட்டு நிற்பது அல்ல. வரையறுக்கப்பட்ட முறையில் நோக்கினால் கூட அவன் சரித்திரத்தை ஏற்படுத்தியவர்களின் பின்னின்று சேவை செய்ய வேண்டியவனல்ல. அவன் மற்றவர்களின் துன்பத்தில் பங்குகொள்ள வேண்டியவன். இல்லாவிட்டால் அவன் தனித்து ஒதுக்கப்பட்டுக் கலையினால் உதாசீனப்படுத்தப்படுவான். கொடுங்கோலர்களின் பல லட்சக்கணக்கான படைவீரர்கள் கூட அவனது தனிமையிலிருந்து அவனை விடுவித்து விட முடியாது. குறிப்பாக அவர்களுடன் அவன் சேர்ந்துகொண்டாலும் கூட. உலகின் இன்னொரு கோடியில் இருக்கும் அறிமுகமற்ற, அவமதிப்புகளைச் சந்தித்த ஓர் படைவீரனின் மௌனம், ஓர் கலைஞனை அவனது தனிமையிலிருந்து விடுவித்து, அவன் அனுபவிக்கும் சுதந்திரத்தின் நடுவே, படைவீரனின் மௌனத்தை மறக்காமல், அவனது கலையின் மூலம் அந்த மௌனத்தை சப்தமாக உருவாக்குகிறான்.

இத்தகைய அருஞ்செயலைப் புரிய நம்மில் எவரும் மகத்துவமுடையவர்கள் அல்லர். ஆனால், வாழ்க்கை நடத்தித் தரும் சூழலில் - இருட்டடிப்பில் அல்லது தற்காலிகப் புகழில் - கொடுங்கோலரின் இறுகிய பிடியில் சிக்கிய நிலையிலோ அல்லது தன்னை வெளிப்படுத்திக்கொள்ளும் வாய்ப்புக் கிடைக்கும் சந்தர்ப்பத்திலோ படைப்பாளி அவனது சமூகத்தின் அன்பைப் பெற்றிட முடியும். அவனது படைப்பின் மேதைமையை உருவாக்கும் இரண்டு பொறுப்புகளை அவன் தனது திறமைக்கு ஏற்ப ஒத்துக்கொண்டு செயல் புரிய வேண்டும் என்னும் நிபந்தனையை அது அவனிடம் முன் வைக்கும்: உண்மைக்குப் பாடுபட வேண்டும்; மற்றும் சுதந்திரத்தை எப்போதும் பேண வேண்டும் என்னும் இரண்டு உறுதிமொழிகளை.

மிக அதிகமான மனிதர்களை ஒன்றுபடுத்தும் மகத்தான அச் சேவையில் அவனது கலை, பொய்களுடனோ, தனிமையை உருவாக்கும் அடிமைத்தனத்துடனோ ஒரு பொழுதும் சமரசம் செய்து கொண்டுவிடக் கூடாது. நமது செயல்பாடுகளில் எந்த விதமான குறைபாடுகள் இருந்தாலும் நமது கலைத்தன்மையின் மேன்மை இந்த இரண்டு உறுதிமொழிகளைத் தனது அஸ்திவாரமாகக் கொண்டிருக்க வேண்டும் - அறிந்துள்ள விஷயத்தில் பொய் கூறாமை. அடக்குமுறைக்குப் பணியாமல் எதிர்த்து நிற்பது

இருபது வருடங்களாக ஒரு நலிவுற்ற சரித்திரம் அமளிகளை உருவாக்கி எமது தலைமுறையின் மக்களைச் சீரழித்து விட்டது. ஒரு விஷயம் எனக்கு உத்வேகத்தை அளிக்கிறது: இன்று எனக்கு எழுதக் கிடைத்த வாய்ப்பு, கௌரவத்தைத் தரும் ஒன்று என்பது மட்டுமின்றி, அது என் கடமையை நினைவூட்டுகின்றது. இந்தக் கடமை எழுதுவது



பற்றி மட்டுமல்ல. குறிப்பாக எனது அதிகாரங்கள், எனது சமூக நிலைமை ஆகியவற்றின் மூலம் இதே சரித்திரத்தின் ஊடே வாழ்ந்திருந்தவர்கள், அவர்கள் அனுபவித்த துயரங்கள், அவர்களின் எதிர்பார்ப்புகள் ஆகியவற்றில் நான் பங்கு பெற வேண்டிய அவசியத்தை உணர்த்துகின்றது. இந்த மனிதர்கள், முதல் உலகப் போரின் போது பிறந்தவர்கள், ஹிட்லர் ஆட்சிக்கு வந்த போது தங்கள் இருபதுகளில் இருந்தவர்கள், புரட்சியாளர்களின் மீது நடத்தப்பட்ட முதல் முதலான விசாரணைகளைப் பார்த்தவர்கள். ஸ்பானிஷ் சிவில் போரின், இரண்டாவது உலகப் போரின், வதைமுகாங்கள் சூழ்ந்திருந்த உலகுகளை எதிர்கொண்டவர்கள், சித்திரவதைகளும் சிறைகளும் நிரம்பிய ஐரோப்பாவில் நடமாடியவர்கள் - இந்த மனிதர்கள் இன்று அவர்களுடைய வாரிசுகளைப் பெற்று அவர்களுக்கு அணு ஆயுதங்களால் அழிக்கப்படும் சூழல் நிரம்பிய உலகில் அவர்தம் ஆக்கங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டிய நிலையைக் காண வேண்டியிருக்கிறது. யாரும் இவர்களிடம் நம்பிக்கை உணர்வு கொண்டிருங்கள் என்று கேட்க முடியாது. அதிகபட்ச நிராசையின் காரணமாக,இவர்கள் தங்கள் உரிமையின் எல்லையைத் தாங்களாகவே வகுத்து, வெறுமையைத் தழுவிக் கொண்டிருந்த ஒரு யுகத்தைத் தவறாக நெருங்கியது ஏன் என்று நாம் புரிந்துகொள்ள வேண்டும். இந் நிலைமையை நாம் போராடி எதிர்கொள்ள வேண்டும் என்பதை மறக்காமல்.

எங்களில் பெரும்பாலோர், என் நாட்டிலும் ஐரோப்பாவிலும் இருப்போர், இந்த வெறுமை சூழ் யுகத்தை ஏற்க மறுத்துவிட்டோம். பேரழிவின் போது தங்கள் வாழ்வைச் சவால் என ஏற்றுக்கொண்டு இன்னொரு பிறவி கிடைத்தாலும் அப்போது நேரிடையாக சாவை எதிர்கொள்ளும் மனத்திடத்தைப் பெற வேண்டும்.

ஒவ்வொரு தலைமுறையும் உலக்கைச் சீர்திருத்தும் கடமை தமக்கு இருப்பதாக சந்தேகத்துக்கு இடமின்றி நினைக்கிறது. என் தலைமுறை சீர்திருத்தத்தைச் செய்யாது. மாறாக அதைவிட உயர்ந்த அருஞ்செயலைப் புரியும். இவ்வுலகம் தன்னை அழித்துக்கொள்வதிலிருந்து தடுத்து நிறுத்தும். சீரழிந்த சரித்திரத்தின் வாரிசு; அதில் புரண்டு கிடக்கும் தோல்வியுற்ற புரட்சிகள், கிறுக்குப் பிடித்து விட்ட தொழில் நுட்பம், தேய்ந்து போன சித்தாந்தங்கள்; அதிகாரத்தைக் கையில் வைத்திருக்கும், ஆனால், அந்த அதிகாரங்களை எப்படிப் பயன்படுத்துவது என்று அறியாத அரைகுறைகள்; வெறுப்புக்கும் அடக்குமுறைக்கும் சேவை செய்யும் அறிவுஜீவிகள் ஆகியோர் அடங்கிய இந்தத் தலைமுறை முதன்முதலாகச் செய்ய வேண்டியது உள்ளும் வெளியுமாக நிலவும் மறுதலிப்புகளை நிராகரித்து விட்டு வாழ்வுக்கும்



சாவுக்கும் அவற்றுக்குரிய மதிப்பைத் தர வேண்டும். இவ்வுலகம் சிதைக்கப்படும் அச்சத்தை, எப்போதும் பரப்பி வரும் நமது விசாரணையாளர்கள் அதை மரணத்துடன் தொடர்புபடுத்தி வரும் நிலையில், நாம் நாடுகளுக்கிடையே சமாதானத்தின் அவசியத்தை வலியுறுத்தி மக்களையும் கலைகளையும் காப்பாற்ற வேண்டும். இதன் அர்த்தம் நாம் யாருக்கும் அடிமையாக இருக்க வேண்டியதில்லை. உடன்படிக்கைப் பேழையை (Ark of the Covenant) அனைத்து மனிதர்களையும் வைத்து மறுபடியும் கொண்டு வருவோம். இந்தத் தலைமுறை இந்த மாபெரும் செயலைச் செய்து முடிக்குமா என்று உறுதியாகக் கூற முடியவில்லை. ஆனால், ஏற்கனவே சத்தியமும் சுதந்திரமும் இணைந்த இந்த இரட்டைச் சவால் எல்லா இடங்களிலும் எழுச்சி பெற்று நிற்கிறது. அதற்காக எந்தவிதமான வெறுப்புமின்றி உயிரைத் தரவும் தயாராக இருக்கிறது. எங்கே அதனைக் கண்டாலும் அதற்குத் தலை வணங்கி உற்சாகப்படுத்த வேண்டும். குறிப்பாக அது தன்னையே தியாகம் செய்யம் போது. நீங்கள் எனக்களித்துள்ள இந்தக் கௌரவத்தை உங்கள் முழு ஒப்புதலுடன் என் தலைமுறைக்கு அளிக்கிறேன்.

படைப்பாளியின் தொழிற் திறமையின் மேம்பாட்டை உரைக்கும் இத்தருணத்தில் நான் அவனைச் சரியான இடத்தில் வைக்க வேண்டும். அவனுடைய தோழர்களிடம் அவன் பகிர்ந்துகொள்வனவற்றைத் தவிர வேறெவற்றுக்கும் உரிமைகொண்டாடக்கூடாது. பாதிக்கப்பட்டாலும் பிடிவாதத்துடன்; சரியாகத் தோன்றாவிடினும் உணர்ச்சி பூர்வமாக விரும்பும் நீதியின் மீதான விருப்பத்துடன்; தனக்குப் பிடிக்காவிட்டாலும் மற்றவர்களுக்காக; எவ்வித அவமான உணர்வுமின்றி கர்வத்துடன் செயலாற்றி, துக்கத்துக்கும் அழகுக்கும் இடையேசிக்கித்தவிக்காமல், சரித்திரத்தின் அழிவைத்த தடுக்கும் முயற்சியில், முன்சொன்ன இரண்டு சவால்களையும் ஏற்று முடிக்க வேண்டும். இதற்குப் பின் யார் அவனிடமிருந்து முழுத் தீர்வுகளையும் அதீத சன்மார்க்க வழிகளையும் எதிர்பார்க்கலாம்? சத்தியம், மர்மங்கள் நிரம்பிய, எளிதில் கிட்டி விடாத, அடக்கியாள வேண்டிய ஒன்று. விடுதலை பயங்கரமானது,கட்டுப்பாட்டுக்கு அடங்காதது. நாம் இந்த இரண்டு குறிக்கோள்களை நோக்கிச் செல்ல வேண்டும். அவை வலியை ஏற்படுத்தினாலும் உறுதியுடன் நாம் செயல்பட வேண்டும். நீண்ட சாலை தரும் சோர்வை எதிர்த்தபடி. ஒழுக்கத்தைப் போதிக்கும் பாதிரியாக ஓர் படைப்பாளி தன் மனச்சாட்சிக்கு ஏற்ப நடக்கவேண்டும். ஆனால், நான் இப்படிப்பட்டவனில்லை என்பதை சொல்லியாக வேண்டும். வாழ்வின் ஒளி மிகுந்த மகிழ்ச்சியை அள்ளி வீசும் சுதந்திரச் சூழலில் வளர்ந்த என்னால் எதையும் துறக்க முடியவில்லை. பழங்கால ஞாபகங்கள் எனது தவறுகளையும் குறைபாடுகளையும் நினைவுபடுத்தினாலும் அவை எனது படைப்புத் திறனை அறிந்துகொள்ள உதவியிருக்கின்றன. அவையே, மௌனமாகத் துக்கங்களைச் சுமந்து வாழ்க்கையை நடத்திய மனிதர்களுக்கு, நான் கேள்வி எதுவும் கேட்காமல் உதவ வேண்டும் என்னும் பிரக்ஞையை என்னுள் ஏற்படுத்தியுள்ளன.

இன்று என்னுடைய கோட்பாடுகளுக்கு நடுவே நான் பெற்றிருக்கும் வரம்புகளுடன், எனக்கு நீங்கள் அளித்திருக்கும் கௌரவத்தைத் தங்களது போரில் எந்தவிதமான வசதியையும் பெறாது, மாறாக வறுமையையும் அடக்குமுறையையும் சந்தித்த என் எல்லா மக்களுக்கும் அஞ்சலி செலுத்தும் விதத்தில் ஏற்கிறேன். ஒவ்வொரு கலைஞனும் ஒவ்வொரு தினமும் மௌனமாகத் தன்னுள் ஏற்றிருக்கும் உண்மையின் விசுவாசத்தையும் விகசிப்பையும் தெரிவிக்கும் முகமாக நீங்கள் தந்துள்ள இப்பரிசை ஏற்று என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து உங்களுக்கு நன்றி தெரிவிக்கிறேன்.

---

ஆல்பெர் காம்யூ, பிரெஞ்சு எழுத்தாளர். இவரது அந்நியன், முதல் மனிதன், விருந்தாளி, பெருந்தொற்று, புரட்சியாளன், வீழ்ச்சி, மகிழ்ச்சியான மரணம், அபத்தசுவர்கள் ஆகிய நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன.

“ஸிந்துஜா” <weenvy@gmail.com>

# அம்மாக்கள்

## ஆர். வத்ஸலா



**1.**

கல் ஆறும் முன் வரச்சொல்லி
அழைத்துக் கொண்டேயிருந்தாள்
அம்மா

கற்பனை விரியும் நேரம்
அழைக்கிறாளே என்று
அலுத்துக்கொண்டே
போனேன்

திரும்பியதும்
அற்புதமாக அமைந்து விட்ட
அன்னையர் தினக் கவிதையை
புலனத்தில் பகிர்ந்து
பாராட்டுக்கள் பெற்று மகிழ்ந்து
தூங்கிவிட்டேன்
எனக்காக வார்த்து
ஆறிப் போன தோசைகளை
சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்
உள்ளே
அம்மா

**2.**

இன்று நானே ஆசையாக
அம்மாவை அழைத்துச் சென்றேன்
கோயிலுக்கு
திரும்புகையில் கேட்டாள்
"அந்த புடவை கட்டிய பெண்ணா,
இல்லெ சல்வார் கமீஸா?
அட்ரஸ் தெரியுமா?"

அவளுக்கெப்படி தெரிந்தது
மற்ற எவளையும்
பிடிக்கவில்லை எனக்கு
என்று?

**3.**

அன்று என்னவோ தோன்றியது
அம்மாவுக்கு உதவ
தூங்குபவளை எழுப்பாமல்
தண்ணீர் நிற்குமுன்
அண்டாவை நிரப்பிவிட்டு
திருப்தியுடன் அலுவலகம் போய்விட்டேன்

அம்மா போன பிறகு
யதேச்சையாக தங்கை சொல்லித்தான் தெரிந்தது
அது ஓட்டையான பழைய அண்டாவென்று

**4.**

அம்மா இறக்கும் போது
கேட்டேன்
"ஒனக்கு என்ன வேணும்?"
ஒன்றும் சொல்லவில்லை

பேரன் பேத்திகளிடம்
சொன்னாளாம்
"ஒங்கம்மா ஒரு மனுஷிங்கறெதெ
எப்பவும் ஞாபகம் வச்சுக்குங்க."

**"ஆர். வத்ஸலா"** <vatsala06@gmail.com>

# இராசேந்திர சோழன் கதைகளில் காமப் பெண்ணுடல்கள்

புதியமாதவி

அதிர்ச்சி தரும் பாலியல் மீறல்களை கதைக் கருவாக கொண்டிருக்கும் இராசேந்திர சோழன் கதைகளின் பெண் பாத்திரப் படைப்புகள், அவர் பெண்களைப் புரிந்துகொள்ளவில்லை என்பதை மட்டுமல்ல, காமத்தையும் புரிந்துகொள்ளவில்லை என்பதையே வெளிப்படுத்துகிறது!

இராசேந்திரன் சோழன் சிறுகதைகள் பெண்ணின் காமத்தைப் பேசுவதில் போட்டிப் போடுகின்றன. அதில் இடம்பெறும் பெண்கள் அனைவருக்கும் காமம் தீர்க்க முடியாத பசியாக அவர்கள் உடலை அலைக்கழிக்கிறது. அவர்கள் எப்படியும் பசி தீர்க்கும் வேட்கை கொண்ட இரவு மிருகங்களாகிவிடுகிறார்கள். அவர்களின் உடல் எப்போதும் பசித்திருக்கிறது. அவர்களுக்கு சதா தன் பசி தீர்க்கும் வெறி மட்டுமே வாழ்க்கையில் பிராதானமாக இருப்பதாக தெரிகிறது. பசித்தால் என்ன கிடைத்தாலும் சாப்பிட்டுவிடும் உடல்களாக அவர்களின் உடல்கள் சித்தரிக்கப்படுகின்றன.

புதுமைப்பித்தனின் 'பொன்னகரம்' போலத்தான் இராசேந்திர சோழனும் எழுத ஆரம்பிக்கிறார். அந்த ஆரம்பம் 'காணிக்கை' கதையில் ஆரம்பித்த வேகத்திலேயே முடிந்தும் விடுகிறது. புதுமைப்பித்தனின் அம்மாளுவும் சந்துக்கு பக்கத்தில் ஆணோடு இருளில் மறைந்து முக்கால் ரூபாய் சம்பாதித்துவிட்டாள்; 'ஆம் புருஷனுக்கு பால்கஞ்சி வார்க்கத்தான்' என்பார் புதுமைப்பித்தன். 'கற்பு கற்பு என்று கதைக்கிறீர்களே, இதுதான் ஐயா பொன்னகரம்' என்று கதையில் புதுமைப்பித்தனே வந்து நிற்பார்.



புதுமைப்பித்தனுக்குள் இருந்த அறச்சீற்றம் கதையில் வெளிப்படையாக தெரியவரும். இராசேந்திர சோழனின் 'காணிக்கை' கதையிலும் இதே பிரச்சனையின் இன்னொரு வடிவம். அங்கே கணவன், இங்கே மகன். ஜுர வேகத்தில் குளிரில் நடுங்கும் மகன் உடல். ராசாத்தி தன் மகனை மெத்தையில் கிடத்தி கதகதப்பான துணியால் போர்த்திவிட்டு, அந்த டெய்லருடன், 'வெறும்தரையில் மல்லாக்க கிடந்தாள் மரக்கட்ட மாதிரி' என்று கதையை முடித்து இருப்பார் இராசேந்திர சோழன்.

இக்கதையில் அப்பெண்ணின் செயலுக்கான ஒரு காரணம் சொல்லப்பட்டிருக்கும். சமூகவியல் நோக்கில் இக்கதை நகர்ந்திருக்கிறது. பெண்ணின் பொருளாதர இயலாமை 'பொன்னகரம்' கதைக்குள்ள அதே பின்னணியைக் கொண்டிருக்கும். ராசாத்தி 'மரக்கட்ட மாதிரி கிடந்தாள்' என்று முடிக்கும்போது அவள் உடலும் உடலோடு பொருந்தாத அவள் மனமும் இரண்டும் வேறு வேறாக துண்டாகிக் கிடக்கும். இக்கதை அப்பட்டமான பொன்னகரத்தின் இன்னொரு பிரதியாகவே இருக்கிறது. ஒருவகையில் இக்கதை வழக்கமான இராசேந்திரசோழனின் பெண் கதையாக இல்லை. அவருடைய பிற பெண்கதைகளிலிருந்து இக்கதை மாறுபட்டுள்ளது.

இராசேந்திர சோழனின் கதைகளில் இடம்பெறும் பெண்கள் உழைக்கும் சம்சாரி குடும்பத்தின் பெண்களாக இருக்கிறார்கள். அக்குடும்பத்தின் ஆண்கள் உழைப்பே கதி என்று இருப்பதால் அப்பெண்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ளாதவர்களாக இருப்பதாக சூசகமாக கதையின் ஆண் கதைப் பாத்திரங்களின் சித்தரிப்பு வழியாக முன்வைக்கிறார்.

'வன்மம்' கதையில் இடம்பெறும் வீராசாமியின் மனைவி செல்லக்கண்ணு, 'நாய்வேஷம்' கதையில் இடம்பெறும் இருசப்பன் மனைவி, 'புற்றிலுறையும் பாம்புகள்' கதையில் வரும் அவள் கணவன்,



'இசைவு' கதையில் இடம்பெறும் நடேசனின் மாமியார்... இவர்கள் அனைவருக்கும் இருக்கும் ஒரே தலையாய பிரச்சனை அவர்களின் உடலிச்சையைத் தீர்க்கமுடியாத அவர்களின் கணவன்மார்கள். எனவே, இப்பெண்கள் அனைவரும் தங்கள் காமப்பசிக்காக அலைகிறார்கள். எது கிடைக்கிறதோ அதை நக்கிப் பிழைக்கும் தெரு நாய்களாக அலைகிறது அவர்களின் காமம்.

காமப்பேய்ப் பிடித்த பெண்ணுடல் என்பது, அவர் கதைகளின் பெண்கள் அனுபவிக்கும் அவஷ்தையாக மட்டுமல்லாமல், அதை எதிர்கொள்ள முடியாமல் வன்முறையில் தள்ளப்படும் ஆண் சமூகத்தின் அவலத்தையும், அவர் கதைகள் சித்தரிக்கின்றன.

'வன்மம்' சிறுகதையில் அவர் படைத்திருக்கும் வீராசாமியின் வன்மத்திற்கு காரணமே அவர் மனைவி செல்லக்கண்ணுதான். செல்லக்கண்ணுவை அறிமுகப்படுத்தும்போது அவள்தான் அந்த ஊரில், 'ப்ராய்சரி போட்டுக்கொண்டு வந்த முதல்பெண்' என்பார். அவளுடைய அந்த உள்ளாடையை (பிரா BRA), அவள் தன்னுடலை பகிரங்கமாக வெளிப்படுத்தும் அவள் அடையாளமாக பார்ப்பது அந்த ஊர் ஆண்கள் மட்டுமல்ல, கதையை எழுதுகிற ஆண் மனமும்தான்.

இக்கதையில் செல்லக்கண்ணுவின் கணவன் வீராசாமி எப்போதும், தன் வேலையில் முழுமனதாக ஈடுபட்டிருப்பவன். மனைவியோடு உரையாடல் நடத்துவதோ அவள் பேச்சுக்கு 'உம்' சொல்வதற்கோ அப்பால் மேற்கொண்டு நீட்டித்து செல்லவே அறியாதவனாக காட்டுகிறார் ஆசிரியர். இதனால்தான் செல்லக்கண்ணு சிரித்து சிரித்து பேசும் ஆண்களுடன் பழகுகிறாள். கணவன் சந்தேகப்படும்போது, "நீ என்னய்யா, நீ... ஊருல இருக்கிற கழுதங்க ஒண்ணொன்னு பேசிக்கிதுன்னா... அதுக்காக பயந்துக்னு கெடக்கச் சொல்றீயா. நம்ம மனசு சுத்தமாயிருந்தா சரிதான்" என்று கணவனுக்கு நம்பிக்கை ஊட்டுகிறாள் செல்லக்கண்ணு.

மீண்டும் ஊர்ப் பஞ்சாயத்து கூடி வழக்குப் பேசும்போதும், "எனக்கு ஏன் இந்த தண்டனை எல்லாம், அவரைப் பிரிஞ்சி என்னாலே தனிச்சு வாழ முடியுமா? குடும்ப பெண்ணுக்கு இதெல்லாம் அடுக்குமா?" என்று பேசத் தெரிந்தவள்.

செல்லக்கண்ணு என்ற பெண், குடும்பம், அதில் கணவன் - மனைவி இருவரின் பங்களிப்பு, இடம் எல்லாமும் அறிந்தவளாகவே பேசுகிறாள். இவ்வளவும் பேசிய செல்லக்கண்ணுதான் கதை முடிவில் தன் சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமே இல்லாதது போல நடந்துக்கொள்கிறாள். அவள் ஊர்ப்பஞ்சாயத்தில் கண்ணீருடன் கதறியதையும் அவள் சொன்னதையும் நம்புகிற வீராசாமி, தன் கண்ணால், மனைவி செல்லக்கண்ணு சோப்பு கம்பேனி ஏஜண்டுடன் உடலுறவு கொண்ட நிலையில் இருப்பதை பார்க்கும்போது, வீராசாமியின் நிலையை கதையாசிரியர் விவரித்து இருப்பார்.

> அவன் இதுவரை எதை நம்பாமல் அசட்டை செய்து வந்தானோ அதையே நேரில் பார்த்துவிட்ட பிறகு... இரத்தம் கொதித்தது; அவமானம் பிடுங்கி தின்றது, ஆண்மை மேலெழுந்து நின்றது...

அவன் மூர்க்கத்தனத்திற்கான காரணம் இக்கதையில் அப்பெண் தன் கணவனை ஏமாற்றியதுதான் என்று கதையை நகர்த்துகிறார் இ.சோ.

அவள் உடல்தான் பிராதான எதிரியாக அவன் முன் நிற்கிறது. 14 ஆண்டுகள் சிறைத்தண்டனை அனுபவித்து அவளுடலை வன்மத்துடன் அவன் அணுகும்போது, அந்த உடல் செல்லக்கண்ணுவின் அந்த உடலாக இல்லை. அவன் பழி தீர்க்க நினைத்த உடல், 'கட்டான உடல், குதிரைக் குட்டி நடை, அந்த மதமதப்பு, பிரெய்சர் கவர்ச்சி.' இப்போது அவன் பார்க்கும் உடல் அந்த உடலாக இல்லை என்பார் இ.சோ.

> முகமெல்லாம் அம்மைத் தழும்புகள், ஒட்டி வற்றிப்போன சுருக்கம் விழுந்த கன்னங்கள்... நரைத்துப் பறந்து கலைந்து

கிடந்த தலைமுடிகள். நெற்றியில் ஒரு திரு நீற்றுப்பட்டை அதில் ஒரு குங்குமப் பொட்டு, காச நோய் பிடித்தமாதிரி நொடிசலான இரத்த ஓட்டமேயில்லாத நீற்றுப்போன கை கால்கள்...

இந்த உடலை அவன் பழிதீர்க்க விரும்பவில்லை. வெளியேறிவிடுகிறான். அவன் கொண்ட வன்மம் என்பது செல்லக்கண்ணு என்ற பெண் மீதா? செல்லக்கண்ணு என்ற பெண்ணுடல் மீதா? யாருடன் வீராசாமிகளுக்கு வன்மம்?!

கதைப்போக்கில் அப்பிரதி விட்டுச்செல்வது ஆணுடல் தன்னால் அடக்கமுடியாத பெண்ணுடல் மீது வன்மம் தீர்த்துக்கொள்ள அலைவதுதான். அதற்கு 'ஆண்மை' என்று இன்னொரு பெயரும் கொடுக்கிறார். கதையில் கதாசிரியர் அப்படித்தான் அதைக் குறிப்பிடுகிறார்.

'நாய்வேஷம்' கதையிலும் எழுத தெரியாத இருசப்பன், தன் பல்பத்தை எழுதத் தெரிந்த சக்தியிடம் கொடுப்பதில் ஆரம்பித்து, அது அவன் மனைவியைக் கொடுப்பது வரை நகர்கிறது.

'பகை' சிறுகதை ஃப்ராய்டின் 'ஓடிபஸ் காம்ளக்ஸ்' (Oedipus complex) கதையாகவே எழுதப்பட்டிருக்கிறது. ஆண் குழந்தைக்கு தன் தந்தை மீதிருக்கும் வெறுப்பு, தன் அம்மாவின் உடலும் அவள் தீண்டலும் தரும் சுகம், அது கிடைக்காதபோது மகன் - தாய் உறவு என்பது தம்பி - அக்கா என்றும், குடும்பத்தில் தன் தாயைப் போல அவன் முன் வரும் அத்தை சித்தியாகவும் இருக்கும்,இருக்கிறது என்பதை அப்படியே கதையாக்கி இருக்கிறார். கதை முடிவில் கணவன் இறந்தப்பின் தன் 10 வயது மகனை மடியில் வைத்துக்கொண்டு இன்பம் காணும் தாயாக... தாயின் தீண்டலில் சுகம் காணும் மகனாக கதை முடிகிறது.

'இசைவு' சிறுகதையில் மாமியார் - மருமகன் பாலியல் உறவுதான் கதையாக. இந்த உறவுக்கும் பெரிதாககாரணம்எதையும்கற்பிக்கமுயற்சிக்கவில்லை இ.சோ.

'இசைவு' கதையில் மாமனார் அடிக்கடி வேலை விஷயமாக வெளியூர் போய்விடுகிறார். மாமியாரோ இரண்டு பெண்களுக்கும் திருமணம் செய்து கொடுத்தப் பிறகும் இளமையான தோற்றத்துடன் இருக்கிறாள்.

மாமியாரைக் காணும் மருமகன் அவளை இப்படித்தான் பார்க்கிறான். அதுவும் 'தன் மனைவி கொஞ்சம் பருமன், மாமி சற்றெ ஒல்லி, அனுபவ முதிர்ச்சியை ஒதுக்கிப் பார்த்தால் மாமியை தங்கை என்றுதான் சொல்லவேண்டும். அந்த அளவு கச்சிதமான தோற்றம்' - மருமகன் பார்வையில் மாமியாரின் உடல் வர்ணனை.

மாமியாருடன் மருமகன் உடலுறவு கொண்டபின் மருமகன் நினைக்கிறான், 'இந்த வயதிலும் எப்படித் துடிப்புடனும் குறுகுறுப்புடனும் இருக்கிறாள்? பாவம், மாமனார், கொடுத்து வைக்காதவர். அவருக்கு ஆளத் தெரியவில்லை.'

இராசேந்திர சோழனைப் பொறுத்தவரை பெண்ணுடல் என்பது ஆணுடலால் அடக்கி ஆளப்பட வேண்டும். அதாவது நுகர்ப்பொருள் கலாச்சாரப்படி அந்த நுகர்ப்பொருள் சரியாகப் பயன்படுத்தப்பட வேண்டும். அப்படி பயன்படுத்தப்படவில்லை என்றால் அந்த உடல் தன்னை அடக்கி ஆளும் இன்னொரு உடலைத் தேடிக்கொள்ளும். இவ்வளவுதான்... ஓர் ஆண் மனம் பெண்ணுடலை ஆள்வதுதான் முக்கியம்; பெண்ணுடல் சரியாக ஆளப்படாவிட்டால் அது தன்னுடலை அடக்கி ஆட்கொள்ளும் இன்னொரு ஆணுடலைத் தேடும் என்பதாகவே பெண்ணுடலின் காமத்தை கட்டமைத்திருத்கிறார்.

இந்து புராண இதிகாசக் கதைகள் 'பெண்கள் இயற்கையிலேயே மிகையான பாலியல் நாட்டம் கொண்டவர்களாதலால், பல ஆண்களுடன் பாலுறவு கொள்ளக்கூடியவர்களாக உள்ளனர்' என்கிறது.

'மேற்கத்திய கிரேக்க ரோம மரபில் ஆணின் பாலியல் செயலூக்கமானது (active), பெண்ணுடையது அடக்கமானது (passive). சுயக்கட்டுப்பாடு (moderation) ஆணுடலுக்கானதாக இருப்பதால் பெண்ணுடல் கட்டுப்பாடற்றதாகவும் இச்சைகளின் தாக்கத்தை தாங்கிக்கொள்ள இயலாததாகவும் இருக்கிறது. பெண்ணின் நிலை பலவீனமானது, உள்ளடங்கிப் போவது. அவளால் தன்னை ஆள முடியாது. தன்னை ஆளுகின்ற இயல்புடைய ஆண்தான் பெண்ணையும் ஆளுகிறான் என்று காட்டப்பட்டிருக்கிறது' என்பார் மிஷெல் ஃபுக்கோ (Michel Foucault).

யூத மரபிலும் பெண்களுக்கு மையமான ஆர்வம் பாலியல் என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு உலகெங்கிலும், தந்தை வழி பண்பாட்டு மரபில் பெண் பாலியல் பாங்கில் கட்டுப்பாடற்ற இயல்வு கொண்டவளாகவே ஆண் பார்வையில் கட்டமைக்கப்பட்டிருக்கிறாள். அவளுடைய பாலியல் உந்துதல்களால் சமூக ஒழுங்கு கெடும், உலகம் அழியும் என்றே அனைத்து தந்தை வழி பண்பாட்டு மரபுகளிலும் பெண்ணுடல் காமம் கட்டமைக்கப்பட்டிருக்கிறது. நாம் கவனிக்க வேண்டியது, காமம் தீர்க்கும் இரண்டு உடலகளில் பெண்ணுடலுக்கு மட்டுமே இத்தனையும் சேர்ந்து பயணிக்கின்றன. ஆணுடலுக்கு இல்லை.

தந்தை வழி பண்பாட்டு மரபின் எழுத்தாகவே இ.சோ சிறுகதைகளும் அவர் கதைகளில் இடம்பெறும் பெண்களும் அப்பெண்ணுடல்களின் பாலியல் மீறல்களும் கதையாகி இருக்கின்றன.

இரேந்திர சோழனின் இந்த ஆண்மைய சிந்தனையின் உச்சத்தை அவருடைய குறு நாவல் 'மகாலட்சுமி'-இல் வெளிப்படையாக காணலாம். உடலின்பத்தை அடக்கி பேரின்பம் தேடும் பயணத்தில் மகாலட்சுமி என்ற பெண்ணுடல் தன் உடலின் காமத்தை வெற்றிகொள்ள இயலாமல் போய்விடுவதாக கதை. திருமண உறவிலும் ஆணுடலை விலக்கி பாலியல் இச்சையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு பயணிக்கும் மகாலட்சுமி தன் டிரைவரும் தன் வீட்டில் வேலை செய்யும் முனியம்மாவும் கொண்ட பாலியல் உறவால் தொந்தரவு செய்யப்படுகிறாள். காம நோய் அவள் உடலைத் தாக்கி படுக்கையில் தள்ளியதும்,0 அதைத் தீர்க்க மருத்துவம் பார்க்க வந்த டாக்டர் அவளை தன் உடலால் கவனித்து அவள் காமத்தை தீர்த்தப் பிறகுதான் அப்பெண்ணுடல் அடுத்தக் கட்டத்திற்கு நகர்வதாக எழுதி இருக்கிறார். அதாவது பெண்ணுடலுக்கு துறவறம் என்பதே சாத்தியமில்லை என்பதுதான் இ.சோ. பெண்ணுடலைக் காணும் மன நிலை.

பெண்ணுடலின் காமத்தை ஆணுடல் தீர்க்காதவரை பெண்ணுடல் என்பது பலகீனமானது. அது எதையும் செய்ய லாயக்கற்றதாகவே இருக்கும். இப்படியாக சிந்திக்கிறது இ.சோ. ஆண் மையம்.

காமம் தீர்க்க அத்தருணத்தில் நடக்கும் மீறல்களாக இராசேந்திர சோழனின் பெண்கள் படைக்கப்படவில்லை. அவர்கள் பொய் சொல்கிறார்கள். கணவனை, உறவினர்களை, ஊர் மக்களை, ஏன் பெற்ற மகளைக் கூட ஏமாற்ற துணிகிறார்கள். அதையும் தாண்டி பத்தினி வேஷமும் போடுகிறார்கள். மொத்தத்தில் பெண்கள் வேஷதாரிகளாகவே வாழ்கிறார்கள்.

பெண் என்பவள் வெறும் உடல் மட்டும்தானா? ஃப்ராய்டு சொல்லும் உளவியல் கருத்துகளும் ஆண் - பெண் உறவு சார்ந்த சிந்தனைகளும் ஃப்ராய்டு என்ற ஆணின் சிந்தனையிலிருந்து வெளிப்படுகின்றன. ஃப்ராய்டின் எண்ணங்களை, இயல்புகளை அவர் வாழ்ந்தக் காலமும் அக்கால சமூகத்தின் ஆண் - பெண் உறவுகளும் பாதித்திருக்கின்றன.

பெண்ணுடலின் காமம் 'கத்துவேன் கொல், முட்டுவேன் கொல்?' என்று அலைபாயும். அந்த உடலின் ஒவ்வொரு அசைவுகளையும் தீர்மானிப்பது அவள் மனம். ஆனால், இக்கதைகளை எழுதும் ஆண்மையம், தங்கள் கதைகளின் பெண்ணுடலுக்கு ஒரு மனம் இருக்கிறதாகவோ, அந்த மனதில் அவள் ஓர் ஆடவனை விரும்புவதற்கும் அவனோடு தன் உடலைப் பகிர்ந்துகொள்வதற்கும் அவளுக்கு பிரத்தியோகமான சில காரணங்கள் - உணர்வுகள் இருக்கும் என்பதையோ, அது இருக்கும்போதுதான் அவளுடல் பாலியல் மீறலை நடத்துமே தவிர என்னவோ அவள் உடல் அதற்காகவே படைக்கப்பட்டிருக்கும் பண்டம் என்பதால் அல்ல என்பதையோ உணர்வதில்லை.

இராசேந்திரசோழன் கதைகளில் வரும் பெண்கள் அனைவருக்கும் உடல் மட்டும்தான் இருக்கிறது. அவள் தன்னுடலை, தன் காமத்தை தீர்க்க தேடுவதும் ஆண் உடலாக மட்டுமே இருக்கிறது. இக்கதைகளில் உடல்கள் மட்டுமே உலாவுகின்றன. ஆணுடல்களுக்காவது வன்மம், ஏமாற்றம் என்று எதாவது உணர்வுகள் இருப்பதாக காட்டுபவர் பெண்ணுடலுக்கு அப்படி எதையும் காட்டவில்லை. இதுதான் ஆண்மைய சமூகம், பெண்ணின் உடலை காமத்தின் இடமாகவும் காமமே பெண்ணாகவும் பார்க்கும் பார்வை. காமமே பெண்ணாக பெண்ணுடலாக இருப்பதால், ஆண் என்ற ஆண்மை பெண்ணுடலை அடக்கி ஆளாதவரை, பெண்ணுடல் பசியுடன் அலைவதாகவே காட்டுகிறார்கள். எந்தப் பெண்ணும் எந்த ஆணுடனும் உறவு கொண்டு தன் காமத்தை தீர்த்துக்கொள்வதாக காட்டுவதில், பெண்ணும் அவள் உடலும் பலகீனமானது என்பதாகவும், அப்பெண்ணுடலை ஆணுடல் ஆண்டு அனுபவித்து அடக்கி ஆள்வதையே பெண்ணுடலும் எதிர்ப்பார்க்கிறதாகவும், தங்கள் கதைகளின் பெண்களைக் கொண்டு ஒரு கருத்தியலைக் கட்டமைக்கிறார்கள்.

ஆண் - பெண் உறவில் காமம் என்பது உடலில் ஆரம்பித்து உடலோடு முடிந்துப்போவதாக நினைக்கிறார்கள். அது மனித உறவில் மனசிலும் இருவரின் எண்ணங்களிலும் மன உணர்வுகளிலும் அரும்பி அங்கிருந்துதான் உடலின் இச்சையாக வெளிப்படுகிறது என்பதை வேண்டுமென்றே புரிந்துகொள்ள மறுக்கிறார்கள்.

ஆண் மையப் புள்ளியில் எழுதிய இராசேந்திரசோழனும் அவர் கதைகளும் பெண்ணையும் பெண்ணுடலையும் மனம், சிந்தனை எதுவுமற்ற ஹார்மோன்கள் மட்டும் சுரக்கின்ற சுரப்பிகளாக மட்டுமே பார்த்திருக்கின்றன.

அதிர்ச்சி தரும் பாலியல் மீறல்களை கதைக்கருவாக கொண்டிருக்கும் இ.சோழனின் பெண் கதைகளில் இப்பாத்திரப் படைப்புகளை வைத்துக்கொண்டு அவர் பெண்களைப் புரிந்துகொள்ளவில்லை என்பது மட்டுமல்ல, காமத்தையும் புரிந்துகொள்ளவில்லை என்பதே வெளிப்படுகிறது!

அவர் சிறுகதைகள், உழைக்கும் பெண்கள், நடுத்தர வர்க்கத்தின் பெண்கள், அவர்களின் வாழ்க்கை, அப்பெண்களின் உணர்வுகள் குறித்த போதாமைகளையும் வெளிப்படுத்துகின்றன.

புதிய மாதவி <mallikasankaran@gmail.com>

# அவளுடையது

வேலு இராஜகோபால்
ஓவியம்: செளம்யா ராமலிங்கம்

தாயம்மாள் திடுக்கிட்டு விழித்தாள். இருட்டில் இரட்டைக் கதவின் இடுக்கின் வழியே வந்த தெருவிளக்கின் மஞ்சள் ஒளியில் குழந்தைகள் உறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்த கனவின் பதைபதைப்பு இன்னும் அடங்கவில்லை. மூச்சின் வேகம் கொஞ்சம் கொஞ் சமாக குறையவேண்டும். இப்படிப் பல நாள் கனவில் திடுக்கிட்டு விழித்திருக்கிறாள். திரும்பவும் கண்ணை மூட முயற்சி செய்தாள்.

அவள் கணவன் இன்னொரு வீட்டில் தூங்கிக் கொண்டிருப்பான். மாமாவைத் திருமணம் முடிக்காமல் இருந்திருந்தால் வேறு யாராவது கணவன் அருகில் படுத்திருப்பான் என்று எண்ணிப் பார்த்தாள். திருமணம் ஆகிப் பதின்மூன்று வருடங்களில் மாமாவுடன் படுத்திருந்த இரவுகள் மிகவும் குறைவு. ஆனாலும் ஏழு பிள்ளைகளைப் பெற்றிருந்தாள். உண்மையிலேயே தன்னை விரும்புகிறாரா? ஒவ்வொரு இரவிலும் எழுகிற கேள்வி. விரும்பவில்லை என்று அவள் கற்பனை செய்ய விரும்பவில்லை. அவளது வாழ்க்கையின் அடித்தளமே அதுதான். ஆனாலும் இன்னொரு பெண்ணை ஏன் வைத்துக்கொண்டார்? அப்படியானால் விரும்பவில்லையா? மாதத்துக்கு ஒருமுறையேனும் வருகிறார். கொஞ்சம் பணமும் கொடுக்கிறார். அவளுக்கு இந்நாள் வரை குழப்பம் தீரவில்லை.

குழந்தைகளைப் பார்த்தாள். வரிசையாக ஐந்தும் தூங்கிக்கொண்டிருந்தன. மூன்று பெண் பிள்ளைகளும் இடப்புறத்தில், இரண்டு பையன்களும் வலப்புறத்தில். ஐந்தையும் எப்படிக் கரையேற்றப் போகிறோம்? ரொம்ப நேரம் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. பின் அவளையறியாமலேயே தூங்கிப்போனாள்.

காலையில் எழுந்து குளித்துவிட்டு கண்ணாடியைப் பார்த்துக் குங்குமப் பொட்டு வைக்கும் போது கவனித்தாள். மாமாவின் முகமும் அவளுடைய முகமும் ஒரே ஜாடையில் இருந்தன. அதைப் பெருமையாக ஒருகாலத்தில் நினைத்திருந்தாள். தாத்தா இறந்து பத்து வருடங்களுக்கு மேலாகிவிட்டது. அம்மா, அவரிடம் போய் கேட்டுத் தொந்தரவு பண்ணித்தான் திருமணம் நடந்தது. வடிவான முகம், சேட்டைகார மாமா



என்று தான் அவளுக்குத் தெரியும். ஆனால், திருமணம் முடிந்த அன்றிலிருந்துதான் தெரிந்தது. இன்னொரு அக்கா மகளை மணம்முடிக்க விரும்பியிருக்கிறார் என்பது. அவள் கொஞ்சம் சிவப்பு. அழகு ஒன்றுதான் காரணமாக இருக்க வேண்டும். தாயம்மாள் கண்ணாடியில் பார்க்கும் போதெல்லாம் நினைத்துக்கொள்வாள்: ‘எனக்கு என்ன குறைச்சல்?’. ஆனால், மாமா என்னவோ இன்னொருத்தியுடன் சேர்ந்துகொண்டு அங்கேயே இருக்கிறார்.

அவருடைய சேக்காளிகளும் அப்படித்தான். மூன்று பேருக்கும் இரண்டு திருமணங்கள். முதல் மனைவிகள் புகைந்துகொண்டுதான் இருந்தார்கள். ஆனால், எரியவோ எரிக்கவோ முடியவில்லை. அந்தக் காலத்தில் பெரும்பாலான ஆண்கள் அப்படித்தான் இருந்தார்கள். இருதார மண தடைச்சட்டம் வரும்வரை.

அவளுடைய பெரியம்மா புருஷன் பெரிய சட்டம்பி. கேஸ்போட்டு விடலாமா என்றெல்லாம் நோண்டிப் பார்த்தார். அதற்கு முன்பே இரண்டாம் தாரம் கட்டிக்கொண்டதால் கஷ்டம் என்று சொன்னார்கள். தாயம்மாள் தான் எழுதித் தரவேண்டும் என்றும் சொன்னார்கள். மாமா எப்படியோ அதை அறிந்துகொண்டு கேஸ்-கீஸ் போட்டால் பிறகு ஒரேயடியாகக் கைவிட்டு விடுவேன் என்றும் மிரட்டியிருந்தார். ஐந்து பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு என்ன செய்வது? அந்த வழி சரிவராது என்று தெரிந்துவிட்டது.

தாயம்மாள் சராசரி உயரமென்றாலும், நெடுநெடு என்று வளர்ந்ததவள் போல் தெரியும். ஆறு பிள்ளைகளைப் பெற்றவள். ஒல்லியாகத்தான் இருந்தாள். தலையில் இருபது பக்கா அரிசியை துணி மூட்டையில் சும்மாடு கட்டியிருந்தாள். வேகமாக நடைபோட்டாள். விருசலாக ஸ்டேஷனுக்குப் போய்விட்டால் பத்துமணி வண்டியைப் பிடித்துவிடலாம். பிறகு எந்த ஊரில் இறங்குவது, அரிசியை பக்கா பக்காவாக யாருக்கு விற்பது என்பதெல்லாம் அன்றைய நாளின் தலையெழுத்தைப் பொறுத்தது.



அரசாங்கத்தின் விதிப்படி அவள் செய்வது குற்றம். போலிஸ்காரன் பிடித்துக்கொண்டு போகலாம். ஆனால், அவர்கள் அவ்வளவாகக் கண்டுகொள்வதில்லை. ஏதோ பிழைப்பு நடத்த இந்தப் பெண்கள் அலைகிறார்கள் என்று விட்டுவிடுவார்கள். புதுரோடு முக்கில் கருப்பாயி நிற்பது அவள் கண்ணில் பட்டது. கருப்பாயி இருந்தாள் தாயம்மாளுக்கு தைரியம் அதிகமாக இருக்கும். யாராவது பிடித்துக் கேள்வி கேட்டாலும் நன்றாகப் பதில் சொல்லுவாள். தாயம்மாளுக்கு கெஞ்சிப் பேசித்தான் பழக்கம். 'ஐயா ஏதோ அஞ்சு பக்கா அரிசிவித்தா அஞ்சி ரூபா கிடைக்கும்' என்று அவர்களின் கருணையில் நம்பிக்கை வைத்திருப்பாள். கருப்பாயி அப்படிக் கிடையாது. 'சாமி, உங்களுக்கு இரண்டு ரூபா தாரேன்' என்று நேரடியாக விஷயத்துக்கு வந்துவிடுவாள்.

கருப்பாயியின் தலையிலும் ஒரு சும்மாடு இருந்தது. அவளுக்கும் மெலிந்த உடம்புதான். இரண்டு நாட்களுக்கு ஊர் சுற்றி அரிசியை விற்று ஊருக்குத் திரும்பி வரும்போது கையில் பத்து ரூபாய் கிடைத்தால் அன்றைக்கு அதிர்ஷ்டம். சில நாட்கள் போலிஸ்காரன் அல்லது இன்ஸ்பெக்டர் பிடித்து விசாரித்தால், ஒரு ரூபாய் மிஞ்சுவதே கஷ்டம். வழக்குப் போட்டு நீதிபதியின் முன்னால் சென்றால், கையிலிருந்த காசையும் செலவழிக்க வேண்டியிருக்கும். அவ்வப்போது அதுவும் நடக்கும். போலிஸ்காரர்கள் சட்டத்தை அமல் படுத்துகிறார்கள் என்று காட்ட வேண்டாமா? தாயம்மாவுக்கும் கருப்பாயிக்கும் இவர்களைச் சமாளிப்பது எப்படி என்று தெரியும். நீங்கள் தெருவில் இறங்கிப் பாருங்கள் உங்களுக்கும் தெரிந்துவிடும்.

போலிஸ்காரர்களுக்கு ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் தினப்படி கிடைத்தால் போதுமென்று இவர்களைப் போல 'அரிசி கடத்துகிறவர்களிடமிருந்து' கிடைத்ததை வாங்கிக்கொள்வார்கள். அவர்களை விடப் பெரிய அதிகாரிகள், லாரியில் அரிசி கடத்துகிறவர்களிடம் வாங்கிக்கொள்வார்கள். எல்லாம் ஒரு தனி உலகம் போலத்தான் இயங்கிக் கொண்டிருந்தது. எல்லோரும் காசுபார்த்துக் கொண்டார்கள். அரிசி கிடைக்காமல் திண்டாடுகிறவர்கள்தான் இவர்களுக்கெல்லாம் மூலதனமாக இருந்தார்கள். அரிசிப் பஞ்சம் வந்ததால் நிறையப் பேருக்குப் பிழைப்பு நடந்து கொண்டிருந்தது.

தாயம்மாளும் கருப்பாயியும் ஸ்டேஷனை அடைந்த போது வெய்யில் 'சுள்'ளென்று அடித்தது. இருவர் முகத்திலும் உடம்பிலும் வியர்வை துடைக்கத்

துடைக்க வழிந்தோடிக் கொண்டிருந்தது. இருபது பக்கா அரிசியை ஒரு மைல் தூரத்துக்கு மேல் சுமந்ததன் விளைவு. இருவரும் சேலையின் முந்தானையில் முடிச்சுப்போட்டு வைத்திருந்த காசை எடுத்து டிக்கெட் எடுத்தார்கள். டிக்கட் கொடுப்பவர் வேண்டா வெறுப்பாக டிக்கெட் கொடுத்தார். பிளாட்பாரத்தில் நிற்பவர்களும் இவர்களை ஏதோ வினோத மிருகங்கள் போலப் பார்த்தார்கள். ரயிலில் ஏற நிற்பவர்கள் டிப்டாப்பாக உடையணிந்திருக்க, இவர்கள் மட்டும் குளிக்காத முகத்துடன், வியர்வைபட்டுக் கசங்கிய உடைகளுடன் இருந்தார்கள். பாசஞ்சர் வண்டி வந்ததும் எல்லோரும் ஏறிக்கொண்டனர்.

அந்த அத்துவானக் காட்டிலிருந்த பட்டிக்காட்டு ஊர்களில் கடைகளே கிடையாது. கடைக்குச் செல்ல வேண்டுமென்றால், இரண்டு மைல் வடக்கே நடக்க வேண்டும். அதுவும் ஒன்றிரண்டு இருக்கும். தானியங்கள் வைத்திருக்க மாட்டார்கள். இந்தப் பஞ்ச காலத்தில் அவர்களுக்குக் கட்டுபடியாகாது. இப்படிப்பட்ட ஊர்களில்தான் தாயம்மாள் அரிசி வியாபாரம் செய்வாள். ஒரு பக்கா அரைப்பக்கா என்று வீடுகளில் வாங்கினாலும் பல ஊர்களைச் சுற்றினால், இரண்டு நாட்களில் இருபது பக்கா அரிசியை விற்றுவிடலாம். ஏழைப்பட்டவர்கள் அரைகுறையாகப் பணம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்வார்கள்.

அந்த ஊரில் தெருவுக்குள் நுழையும் போது வெய்யிலின் உக்கிரம் அதிகமாகிவிட்டது. முதலில் இருந்த ஒரு காரவீட்டின் முன்னால் தாயம்மாள் நின்றுகொண்டு, ‘அரிசி, அரிசி’ என்று கூவினாள். ‘அரிசி, அரிசி, நில்லும்மா’ என்று நடுக்கூடத்திலிருந்து கேட்டது. ‘அரிசி எப்படி வச்சிருக்க. நல்ல அரிசியா அல்லது புழுத்த அரிசியா’ என்று கேட்டுக்கொண்டே ஒரு மகராசி உள்ளே இருந்து வந்தாள். தாயம்மாளுக்கு இப்படியெல்லாம் பேசினாலும் கோபம் வராது. அவர்களை நம்பித்தானே வியாபாரம் நடக்கிறது. ‘ரொம்ப நல்ல அரிசிம்மா. இல்லாட்டி நாங்க பொழப்பு நடத்த முடியுமா? பிறகு எல்லோரும் ரேஷன் அரிசி வாங்கப் போயிருவாங்க...’ என்றாள்.

வீட்டுக்காரம்மா முன்னால் அரிசி மூட்டையை இறக்கிவைத்து விட்டு, கயிற்றை அவிழ்த்து, அரிசியைக் கையில் எடுத்துக் காட்டினாள். வீட்டுக்கார அம்மா, ஒரு குத்து அரிசியை எடுத்து, அதிலிருந்து கொஞ்சத்தை வாயில் போட்டு மென்று பார்த்தாள். ‘பரவாயில்லை’ என்று சொல்லிவிட்டு, பேரம் பேச ஆரம்பித்தாள். அரிசி நன்றாக இருந்தால் கூட, ‘பரவாயில்லை’ என்று சொன்னால்தான் விலையைக் குறைக்க முடியும் என்று வீட்டுக்காரம்மா நினைப்பது தாயம்மாவுக்குப் புரியும். ஆனாலும் ஒன்று சொல்லமாட்டாள். முதல் ஆள். எட்டணா கிடைத்தாலும் விற்றுவிடலாம்.

அன்று மாலைக்குள் இருவரும் நான்கு ஊர்களைச் சுற்றியதில் பத்து ரூபாய் மிச்சம் பார்த்தார்கள். தாயம்மா வீட்டுக்கு வந்து சேரும் போது இரவு மணி பதினொன்றாகிவிட்டது. ஆறு குழந்தைகளும் தலை ஒருபுறமும் கால் ஒரு புறமுமாக ஒரு வகையில்லாமல் தூக்கிக்கொண்டிருந்தார்கள். பெரியவள் சங்கரி மட்டும் விழித்துப்பார்த்துவிட்டு, அம்மா என்று உறுதியானதும் மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள். பெரியவன் கணேசனும் சின்னவன் கோபாலும் வராந்தாவில், தீப்பெட்டி ஒட்டும் பலகைக்கருகில் கிடந்தனர். பசை காய்ச்சியிருந்த பாத்திரம் காலியாக இருந்தது. அதனருகே அன்று காலையிலிருந்து பிள்ளைகள் நீலக்கலர் தாள்ஒட்டி மடித்து வைத்த தீப்பெட்டிப் பெட்டிகளின் மேல்ப்பகுதி மூலையில் குவித்து வைக்கப்பட்டிருந்தது. பிள்ளைகள் விரசலாகத்தான் ஒட்டுகிறார்கள். உள்ளறையில் அடுக்கி வைக்கப்பட்ட குச்சிக் கட்டைகள் கிடந்தன. நாளைக்கு கம்பெனிக்குப் போனால், இந்த வாரத்துக்கான கூலியாக பத்துப் பதினைந்து ரூபாய் கிடைக்க வாய்ப்பிருந்தது. தாயம்மாள் குளித்துவிட்டு, மண்பானையில் தண்ணி ஊற்றிக் கொஞ்சம் மீதமிருந்த சோற்றில் உப்பை மட்டும் போட்டுக் குடித்து விட்டு, வராண்டாவருகில் இருந்த படியில் ஆசுவாசமாக அமர்ந்தாள்.

பிள்ளைகள் யாரும் பள்ளிக் கூடத்துக்குப் போவதில்லை என்ற கவலை எழுந்தது. சங்கரி மட்டும் காலையில் சோற்றை வடித்துவிட்டுப் ஹைஸ்கூல் போய்வந்தாள். இரண்டாமவன், நாலாவதற்கு அப்புறம் போகமாட்டேன் என்று அடம்பிடித்துவிட்டான். மற்றப் பெண் பிள்ளைகளும் பள்ளிக்கூடத்துக்குப் போகவில்லை. கோபால் மட்டும் ஏனோதானோவென்று அக்காவின் அறிவுரைக்காக அவ்வப்போது போய்வந்தான்.

ஆம்பிளை இருந்தும் இல்லாதது போலத்தான். அரசு வேலை பார்த்த தாயம்மாளின் கணவன், அவளை விட்டுவிட்டு, கூட வேலை பார்த்த ஒருத்தியை இரண்டாம் தாரமாகக் கட்டிக்கொண்டு போய்விட்டான். மாதம் ஒருநாள் வந்து ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டுப் போய்விடுவான். அதையும் சண்டை போட்டுத்தான் வாங்க வேண்டியிருந்தது. கூட வாழ்ந்திருந்தால், அரசாங்க உத்யோகத்தில் இருந்தவன் பிள்ளைகள் இப்படித் தீப்பெட்டிக் கட்டை ஒட்டிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. பள்ளிக் கூடம் போயிருப்பார்கள். அவளும், நாய்படாத பாடுபட்டு அரிசி வியாபாரம் பார்க்கப் போக வேண்டியதில்லை. ஆனால், போக வேண்டியிருந்தது.

தாயம்மாள் முந்தானையில் இருந்த முடிச்சை அவிழ்த்துப் பார்த்தாள். ஐம்பத்தி ஆறு ரூபாய் இருந்தது. நாலு ரூபாய் மிச்சம். மத்தது அடுத்த வியாபாரத்துக்கான முதல். நாளைக்குச் சனிக்கிழமை கம்பெனியில் பதினைந்து இல்லாவிட்டால் பன்னிரண்டு ரூபாயாவது கிடைக்கும். அடுத்த வாரத்தை ஓட்டிவிடலாம். கதவு நிலையிலேயே தலையை வைத்து நிம்மதியாகத் தூங்கிப்போனாள்.

வேலு இராஜகோபால் <vrajagopal59@gmail.com>

# படைப்பாக்கச் செயல்பாடுகளில் பெண்கள் ஈடுபடுவது இப்போதும் சாத்தியமில்லாததாகவே இருக்கிறது


## எமரால்டு ஃபெனெல், கேரி முல்லிகன்

### தமிழில்: ராம் முரளி


2020இல் வெளிவந்த Promising Young Woman திரைப்படம் அவ்வருடத்தின் ஆஸ்கர் விருது விழாவில் சிறந்த திரைக்கதைக்கான விருதைப் பெற்றது. பெண் மையத் திரைப்படமான இது, ஒரு சமூகத்தில் பெண்ணின் இருப்பு எந்தளவிற்குப் பலவீனமாகவும் அலட்சியமாகவும் அணுகப்படுகிறது என்பதைப் பிரதானப்படுத்துவதாக இருந்தது. பெண்ணுடலைக் கேளிக்கை வெளியாகக் கட்டமைக்கும் ஆணாதிக்கப் பண்புகளை எதிர்ப்பதாகவும் அதே சமயத்தில் அதை எள்ளலுடன் பகடி செய்வதாகவும் இப்படைப்பு உருவாக்கப்பட்டிருந்தது.

கேஸி எனும் இத்திரைப்படத்தின் மையக் கதாபாத்திரம் ஒவ்வொரு இரவும் மது விடுதிகளில் அதீதப் போதையில் கலங்கித் துவண்டிருப்பதாகத் தன்னைக் காட்டிக் கொள்கிறாள். அது உண்மையில் அவளுடைய வீழ்ச்சிக்கான கணங்களாக இருப்பதில்லை. ஒரு பொறியைப் போல, ஆண்களின் திமிரை உரசிப் பார்க்கும் ஒரு விளையாட்டாக அவள் அதைப் பிரயோகிக்கிறாள். அவளை அணுகி, பாசாங்காக உதவி செய்வதைப்போல நெருங்குபவர்களின் உள்நோக்கங்களை அறிந்திருக்கும் அவள், அதன் உட்சபட்ச எல்லை வரை சென்று அவர்களைப் பழி தீர்க்கிறாள். இதுவொரு அன்றாட நிகழ்வாகவே அவளது வாழக்கையில் இருந்தாலும், அவள் மனதிலும் நினைவுகளிலும் பெரும் ரணங்கள் இருக்கின்றன. அதைக் கடப்பதற்கான ஒருவடிகாலாகஇச்செயலை அவள் பிரயோகித்துப் பார்க்கிறாள். அவளுடைய ஆளுமை முரட்டுத்தனமாக வெளிப்படும் இரவுகளாக அவை இருக்கின்றன.

ஒரு பெண், பிறர் பார்வைக்குப் பலவீனமானவள், அதிகாரத் தரப்பின் ஆதரவோ தற்காலத்தில் உண்மையான அரவணைப்போ இல்லாதவள்; தன் கடந்த கால வாழ்க்கையின் சிதறடிக்கப்பட்ட பகுதியொன்று, அது உயிர்ப்புடன் இருந்தபோது அவளுக்கு வழங்கியிருந்த அளப்பரிய நேசத்திற்காக, எந்தெந்த எல்லைகளுக்குப் பயணப்படுகிறாள்? அதில் அவள் அடைவது என்ன, இழப்பது என்ன? உண்மையில் அவளுடைய நோக்கம் என்னவாக இருக்கிறது? ஆகியவற்றை இயக்குநர் எமரால்டு ஃபெனெல் துணிச்சலாகவும் அதே நேரத்தில் மையநீரோட்டக் கதையோட்டத்தின் பண்புகள் குலையாமலும் சுவாரஸ்யமாக உருவாக்கியிருக்கிறார்.

பொதுவாக, ரொமாண்டிக் காமெடி எனும் வகையில் அமைந்த திரைப்படங்கள் ஆண் தரப்பையும் ஆண்களுக்கு ஆதரவாகவுமே உருவாக்கப்பட்டிருப்பதை நாம் பார்த்திருப்போம். அதற்கான எதிர்வினை போல இத்திரைப்படம் தனது முதற் காட்சியில் இருந்தே ஆண்களைப் பலமற்றவர்களாகவும் சந்தர்ப்பவாதிகளாகவும் கட்டமைக்கிறது. பாலியல் குற்றங்கள் குறித்த விவாதங்கள் பெருகியிருக்கும் இன்றைய சூழலுக்கு மிகுந்த பொருத்தபாடுடைய படைப்பாகவும் Promising Young Woman திரைப்படம் இருக்கிறது.



இயக்குநர் எமரால்டு ஃபெனெல்,இதில் முதன்மைக் கதாபாத்திரத்தில் நடித்திருந்த கேரி முல்லிகன் ஆகியோரிடத்தில் இத்திரைப்படம் குறித்தும் அதன் விளைவுகள் குறித்தும் திரைப்பட விமர்சகர் ஏமி ஃபிளமிங் மேற்கொண்ட நேர்காணலின் தமிழாக்கம் இது

- ராம் முரளி

**ஆஸ்கர் விருதுகள் அறிவிக்கப்பட்டதற்கு அடுத்த நாள் எப்படி உணர்ந்தீர்கள்?**

**எமரால்டு ஃபெனெல்:** நானும் கேரியும் அதிர்ச்சியாகவும் கூச்சமாகவும் உணர்ந்தோம். இப்போதும் என் சிந்தனை வேறெங்கோ இருப்பதாகவே கருதுகிறேன். ஒரு வருடத்திற்கு முன்பு இத்திரைப்படம் குறித்துப் பேசிக்கொண்டிருந்தபோது, இதை ஒருசிலர் மட்டுமே விரும்பக்கூடும் என்றே நினைத்திருந்தேன். நம்முடைய எதிர்பார்ப்புகளைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ள வேண்டும். அதனால், இப்படியொரு அறிவிப்பு வந்தபோது, பெரும் உற்சாகத்தை ஏற்படுத்துவதாக அது அமைந்துவிட்டது. இந்த வருடத்தில் வெளியான திரைப்படங்களில் எவற்றுக்கெல்லாம் அங்கீகாரம் கிடைக்கும் என்பதை எங்களால் முன்கணிக்க முடியவில்லை. ஆனால், பல தனித்துவமான படங்கள் வெளியாகியிருந்தன. One Night in Miami, Minari, The Father, Nomadland. இவை அனைத்துமே விதிவிலக்கானவை, தனித்துவமானவை.

**கேரி முல்லிகன்:** விருது விழாக்கள் பற்றிக் குறிப்பிட வேண்டுமென்றால், அவை திரைப்படங்களைக் கொண்டாடுகின்றன. குறிப்பாக, வேறு எந்த வகையிலும் பார்வையாளர்களைச் சென்றடைய வாய்ப்பில்லாத படங்களை அவை முதன்மைப்படுத்துகின்றன. இந்தச் செயல்பாடு அற்புதமானது. ஆஸ்கர் விருதுகளில் Another Round போன்ற திரைப்படத்தைச் சிறந்த இயக்குநர், சிறந்த திரைப்படத்திற்கான போட்டிக்குக் கொண்டுவருவது மகிழ்வளிக்கிறது. அதேப்போல, பாஃப்டா விருது விழாவில் Rocks போன்ற படத்தைப் பார்க்க முடிவதும் வரவேற்க வேண்டியது.

இந்த எல்லா திரைப்படங்களையும் நான் இன்னும் பார்த்திருக்கவில்லை என்றாலும் Minari எனக்கு மிகவும் பிடித்திருந்தது. தற்காலத்தின் தலைசிறந்த பிரிட்டிஷ் நடிகர் டேனியல் கலுயா என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை. அதனால் எனது முழு ஆதரவும் அவருக்கே. Mank திரைப்படத்தில் அமண்டா செய்ஃபிரெட் மிகச் சிறப்பாக நடித்திருந்தார். இவர்கள் எல்லோரையும்விட எமரால்டு அனைத்து விருதுகளையும் வாங்க வேண்டுமென விரும்பினேன். ஆமாம் நான் சார்புடையவள் தான். எமரால்டு, ஷோலெ (Choe Zhao) போன்றோர் தங்கள் படங்களின் மூலம் அற்புதங்களைச் செய்திருக்கிறார்கள் என்று சொல்வதெல்லாம் பைத்தியக்காரத்தனமாகாது. நாம் இப்போது 2021ஆம் ஆண்டில் இருக்கிறோம். ஆனால், சிறந்த இயக்குநர் விருதுக்குப் பரிந்துரைக்கப்பட்டிருக்கும் முதல் பிரிட்டிஷ் பெண் இயக்குநர் எமரால்டு-தான். இது நம்ப முடியாததாக இருக்கிறது.

**பெண்கள் மீதான வன்முறையை எதிர்த்து யுனைடெட் கிங்டமில் நடைபெற்று வரும் போராட்டங்களின் பின்னணியில் இந்தத் திரைப்படத்தை எப்படிப் பொருத்திப் பார்க்கிறீர்கள்?**

**எமரால்டு:** நிச்சயமாக இதை ஒரு விழிப்புணர்வு சார்ந்த படமாக நான் கருதவில்லை. இது கோபத்தையும் துக்கத்தையும் முதன்மைப்படுத்துவதாக இருந்தாலும், எப்படி எங்களால் மன்னிப்பை வழங்க முடிகிறது, பெண்கள் ஒரு சமூகமாக எப்படி ஒவ்வொன்றில் இருந்தும் முன்னோக்கிச் செல்கிறார்கள் என்பதையும் பற்றியது. இப்போது நிகழ்பவற்றைப் பார்க்கும்போது உண்மையாகவே ஓர் உரையாடல் தொடங்கியிருப்பதாகவே உணர்கிறேன். எப்போதும் அலட்சியமாகவே உணரப்பட்டு வந்த பெண்களின் போராட்டம் தீவிரமாகக் கருதப்பட வேண்டிய ஒன்று எனும் நிலையை இப்போது அடைந்திருக்கிறது. கடந்த சில வருடங்களாகத்தான் எங்களால் பகிரங்கமாகப் பொதுவெளியில் எங்கள் உரையாடல்களை முன்வைக்க முடிந்திருக்கிறது. எங்கள் கோபத்தையும் பயத்தையும் துயரத்தையும் எங்களால் பகிர்ந்துகொள்ள முடிந்திருக்கிறது. அதோடு, இப்போதுதான் முதல்முறையாக மக்களும் எங்கள் குரல்களுக்குச் செவிமடுக்கத் தொடங்கியிருப்பதாகவும் தோன்றுகிறது. ஜெஸ் ஃபிலிப்ஸ் போன்ற பெண்களால் நான் பெரிதும் உற்சாகமாகவும் உணர்ச்சிப்பூர்வமாகவும் இருக்கிறேன். நான் பாதுகாப்பாக இருப்பதான உணர்வை அவர் உண்டாக்குகிறார். யுனைடெட் கிங்டமில் படுகொலை செய்யப்பட்ட பெண்கள் குறித்து பல வருடங்களாக அவர் போராடி வருகிறார். ஒரு வெற்றிடத்தில் நின்று உரையாடுவதாகவே அவர்களுடைய செயல்பாடுகள் கருதப்பட்டன. அவர்களின் குரல்களை யாரும் கேட்கவோ பொருட்படுத்தவோ தயாராக இல்லை. ஆனால், இப்போது உண்மையாகவே, அமைப்புமுறையில் சில மாற்றங்கள் ஏற்படும் என்கிற நம்பிக்கை உருவாகியிருக்கிறது. இப்போதைக்கு அத்தகைய மாற்றங்களை நான் நம்பிக்கையுடன் எதிர்நோக்கி காத்திருக்கிறேன்.

**இத்திரைப்படம் மீடு (MeToo) செயல்பாடுகளை ஆதரிக்கும் ஒரு பழிவாங்கல் திரைப்படமாகச் சொல்லப்படுகிறது. இதை உருவாக்குவதில் உங்களுடைய நோக்கம் என்னவாக இருந்தது?**

**எமரால்டு:** ஒரு நினைவுக் குறிப்பாகவோ இயக்கச் செயல்பாட்டின் ஓர் அங்கமாகவோ பெண்களின் படைப்புகளை அரசியல்படுத்த வேண்டிய தேவை இருக்கவே செய்கிறது. ஆனால், இந்தத் திரைப்படத்தில் பேசப்பட்டிருப்பவை நீண்ட நெடுங்காலமாகவே இருந்துவருகின்றன, அதுகுறித்து எழுத வேண்டுமென்று பல வருடங்களாகவே நினைத்து வந்தேன். அதனால், இதை ஒரு குறிப்பிட்ட வகையில் அடங்கும் படைப்பாக உருவாக்க முடியுமா என்ற யோசனையில் இருந்தேன். அதன் நீட்சியாகவே, இது நம் எல்லோருக்கும் தெரிந்த ஒரு செயலை (மதுபோதையில் இருக்கும்


எமரால்டு ஃபெனெல், கேரி முல்லிகன்

பெண்ணைத் தனது பாலியல் இச்சைகளுக்குப் பலியாக்குவது) குறித்ததாக அமைந்துவிட்டது. அச்செயல் சாதாரணமானதாகவோ தீங்கற்றதாகவோ கருதப்படலாம். என்றாலும், வேறொரு கோணத்தில் இருந்து அதைப் பார்க்கும்போது நம்ப முடியாத வகையில் அது மோசமானதாகத் தோன்றுகிறது.

**கேரி:** இவை அனைத்தும் மிகவும் பரீட்சயமானவைதான். ஓர் ஆணின் பார்வையின் வழியே சொல்லப்படும் 'ரொமாண்டிக் காமெடி' வகையிலான திரைப்படங்களில் இதுபோன்ற சூழல்களை நாம் நிறையவே பார்த்திருக்கிறோம். அவற்றில், கவர்ச்சிகரமான பெண்ணைத் தன்வசப்படுத்தி அவளுடன் உடலுறவு கொள்வதற்காக அவள் அதிகளவில் மது அருந்தும்வரை காத்திருக்கும் ஆண்களை நாம் பார்த்திருப்போம். ஏனெனில், நிதானமாக இருக்கும்போது அவள் அந்த ஆணுடன் அவனுடைய வீட்டிற்குச் செல்லப் போவதில்லை. இந்தச் சூழலைப் பலதிரைப்படங்களில் பார்த்திருக்கும் நாம் இது ரொம்பவே சாதாரணமானது என்றுதான் கருதியிருப்போம். உண்மையில் நான் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். 'இது ரொம்பவும் மோசமானது' என்று ஒருபோதும் நான் இச்சூழலைக் கருதியதில்லை. இவற்றைப் பார்க்கும்போது, 'இதுதான் வாழ்க்கை, இப்படித்தான் வழக்கத்தில் இருக்கிறது' என்றுதான் கருதி வந்தேன். ஆனால், இந்தத் திரைப்படம், 'கொஞ்சம் இருங்கள், இதில் வேறொரு கோணமும் இருக்கிறது' என்று சொல்கிறது.

**எமரால்டு:** ரொமாண்டிக் காமெடி, பழிவாங்குதலை மையப்படுத்தும் த்ரில்லர்கள், திகில் படங்கள் என எனக்கு இந்த அனைத்து வகைகளும் பிடிக்கும். எனது இந்தத் திரைப்படத்தையே இந்த வகைகள் அனைத்திலும் பொருத்திப் பார்க்கவும் முடியும். Promising Young Womenனின் மையக் கதாபாத்திரம் யாருடனும் காதலில் விழுவதில்லை. இது ரொமாண்டிக் காமெடி போலத் தோன்றவில்லையா? அவள் ரகசியமாகச் சில செயல்களைச் செய்துவருகிறாள், யாரும் அவற்றை அறிருந்திருப்பதில்லை, அனைத்தும் நலமாக நகர்வதாகக் கருதுகிறாள், இது திகிலாக இருக்கிறது அல்லவா? பழிவாங்குதலை மையப்படுத்தும் த்ரில்லர் வகைபடங்களின் அனைத்துக்கூறுகளும் உள்ளடங்கிய ஒரு படத்தை இயக்கும் அதே சமயத்தில், மக்கள் எளிதாகவும் சராசரியானதாகவும் கருதும் ஒன்றைத் தலைக்கீழாக்கி அவர்களை அசௌகரியப்படுத்த முடியுமா என்றும் நான் முயற்சித்துப் பார்க்க விரும்பினேன். கேரி யதார்த்தத்தோடு மிகவும் பிணைக்கப்பட்டவராக இருப்பதால், ஒரே படத்திற்குள் ஒன்றிலிருந்துவேறொன்றாகத்தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும் இந்த வகைகளுக்கும் கதையோட்டத்திற்கும் இடையில் அவரைப் பொருத்துவது எளிதாக இருந்தது. ஏனெனில், எல்லாவற்றுக்கும் மத்தியில் இங்கு ஒரு அசலான நபர் இருக்கிறார். பார்க்கும்போது மகிழ்ச்சியூட்டுவதாகவும் வினோதமானதாகவும் அதே நேரத்தில் அதில் அப்பட்டமான உண்மை வெளிப்படுவதாகவும் எங்கள்

திரைப்படம் இருக்கவேண்டும் என்று விரும்பினோம். அதனால், பழிவாங்கல் என்றால் என்ன, குறிப்பாகப் பழிவாங்கும் எண்ணத்தில் இருக்கும் பெண்ணில் அவ்வுணர்வு எத்தகைய வலியை உண்டாக்குகிறது என்பது பற்றிய நேர்மையான அணுகுமுறையுடன் இந்தத் திரைப்படத்தை உருவாக்க முடியுமா என்று யோசித்தேன். மீ டூவுக்கு முன்னதாகவே இத்திரைப்படம் உருவாகியிருக்கக்கூடும் என்றே கருதுகிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், கேரி?

**கேரி:** இக்கேள்விக்கு ஒரு திட்டவட்டமான பதிலைச் சொல்வது கடினமானது. ஏனெனில், அதிகளவில் பெண் மையத் திரைப்படங்கள் உருவாக்கப்படுவதில்லை. அந்த வகையில் பார்க்கப்போனால், இது ஒருவேளை உருவாக்கப்படாமலும் போயிருக்கலாம். இதுவொன்றும் சூப்பர் ஹீரோ படமோ வேறெதுவோ இல்லையே.

**எமரால்டு:** யாரோ ஒருவர் இத்திரைப்படத்தின் மையப் பாத்திரமான கேஸியை 'பழிவாங்கும் பார்பீ' என அழைத்தார்கள்.

**கேரி:** பாலியல் அல்லது அர்த்தமற்ற காரணங்கள் அல்லது வேடிக்கையான சில கருத்துரைப்புகள் பகிரப்படுகின்றன. இப்போதும் எனக்குக் கடினமாகவே இருக்கிறது. எனக்கு ஏற்ற சிறந்த கதாபாத்திரத்திற்காக இன்னமும் நான் காத்திருக்க வேண்டியிருக்கிறது. என்னால் ஒரு கதாபாத்திரத்தை உருவாக்க முடியாது. நடிக்க மட்டுமே முடியும். அதனால் நான் கதைகளுக்காகக் காத்திருக்கிறேன். வருடத்திற்கு ஒன்று என்கிற கணக்கில் தவறவிடக்கூடாத ஒரு கதாபாத்திரம் கடந்த 10 ஆண்டுகளாக எனக்குக் கிடைத்து வருவதால் ஓரளவு நான் அதிர்ஷ்டம் பெற்றவளாகவே இருக்கிறேன். ஆனால், பெரிய அளவில் இன்னமும் மாற்றம் எதுவும் நிகழவில்லை. மார்வல் திரைப்படத்தில் பங்குபெறாத காரணத்தால், ஒரு நல்ல கதையை உருவாக்கியதும், உடனடியாக அதில் நடிக்க அணுகப்படும் முதல் நபராக நான் இருப்பதில்லை. அதனால் எப்போதும் நல்ல கதைகள் என்னை வந்தடைவது இல்லை. எனினும், அண்மையில் பெண்களுக்கான நிறைய நல்ல கதாபாத்திரங்கள் உருவாக்கப்படுகின்றன எனும் உணர்வும் எனக்கு இருக்கிறது. எமரால்டைப் போல, ஃபோபே வல்லார்-பிரிட்ஜ் போல, மார்கெட் ராபி போல மிகவும் துடிப்புடன் செயல்படும் பெண்கள் இருக்கிறார்கள். புதிய, அற்புதமானவற்றை உருவாக்குவதில் மிகவும் முனைப்புடன் இருக்கும் பெண்கள் இவர்கள்.

**எமரால்டு:** இத்திரைப்படம் ராபியின் தயாரிப்பு நிறுவனமான 'LuckyChap' உடன் இணைந்துதான் தயாரிக்கப்பட்டது. அதனால் அதன் தயாரிப்பு மிகவும் எளிதாக இருந்தது. அதுதான் அவர்களின் குறிக்கோளாகும். ஒரு படம் சரியாக உருவாக, 10 படங்கள் கைவிடப்பட வேண்டியதாக இருக்கிறது. எனக்கான எண்ணிக்கை கொஞ்சம் அதிகமானது.

**உங்களுக்குள் இருக்கும் இளம் மனது இந்தத் திரைப்படத்தைப் பார்ப்பதில் பலன் அடைந்திருக்கிறதா?**

**கேரி:** என்னுடைய இளம் வயதில் இந்தப் படம் வந்திருக்கலாமோ என்று எனக்குத் தோன்றுகிறது.

**எமரால்டு:** நானும்தான். கடவுளே! இந்தப் படம் முழுமையாகவே என்னுடைய இளம் வயதிற்கானதுதான். அதனால்தான் இத்திரைப்படம் எளிதில் அணுகக்கூடியதாகவும் வேடிக்கையானதாகவும் சுவாரஸ்யமானதாகவும் இருக்க வேண்டும் என்று விரும்பினேன். அது இப்படியெல்லாம்தான் உருவாகியிருக்கிறது என்று நம்புகிறேன். முதலும் முடிவுமாக, மக்கள் பார்க்க விரும்பக்கூடிய ஒரு படமாக அது இருக்க வேண்டும். நீங்கள் ஒரு பெண் திரைப்பட இயக்குநராகவோ நடிகராகவோ இருந்தால், மிக அரிதாகத்தான் படம் இயக்குவதற்கோ அல்லது வெறுமனே ஒரு புத்தகம் எழுதுவதற்கோ உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும். ஒரு பெண்ணாக இருந்து படைப்பாக்கச் செயல்களில் ஈடுபடுவது இப்போதும் சாத்தியமில்லை எனும் நிலைதான் இருக்கிறது. இந்தத் திரைப்படம் குறித்த பெரும்பாலான உரையாடல்கள் இத்திரைப்படம் குறித்ததாக அல்லாமல் அதன் பேசுபொருள் சார்ந்ததாகவே இருந்தது. ஆண் இயக்குநர்கள் தங்கள் படைப்புகளின் வழியே வெளிப்படுத்தும் கருத்துகளை ஏற்றுக்கொள்பவர்கள் ஒரு பெண் என்றதும் அதிலுள்ள எண்ணங்களைச் சந்தேகத்துடன் மட்டுமே அணுகும் மனநிலையைப் பெற்றிருக்கிறார்கள். ஆண்கள் தங்கள் எண்ணங்களைச் சுதந்திரமாக வெளிப்படுத்தலாம். எங்களுக்கு அந்தச் சுதந்திரம் இல்லை. தங்கள் வலியின் ஒரு பகுதியாகத் திரைப்படத்தை வெளிப்படுத்த வேண்டிய தேவை அவர்களுக்கு இல்லை. நான் ரொம்பவும் அதிர்ஷ்டம் பெற்ற ஒரு வெள்ளையினப் பெண்ணாக வளர்ந்திருக்கிறேன். அதனாலேயே, என்னால் பெரும்பாலான கைவிடப்பட்ட பெண்களின் உணர்வுகளையும் வலிகளையும் துல்லியமாக புரிந்துகொள்ள முடியாமல் இருக்கிறது. அவற்றைக் குறித்து என்னால் பேசக்கூட முடியாது.

**கேரி:** இது மிகவும் தந்திரமானது. திரைப்படக் கலை ஓர் அற்புதமான தளம் என்றாலும், எங்கள் அனுபவங்கள் பெரும்பாலான மக்களின் வாழ்வனுபவங்களில் இருந்து வேறானவை. எனவே, உங்களால் புரிந்துகொள்ள முடியாதவை குறித்துப் பேசும்போது மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். இந்தக் கருத்துகளின் மீதான எங்கள் எண்ணப் பிரதிபலிப்புதான் இத்திரைபடம். இவற்றுக்கெல்லாம் இத்திரைப்படம் நேரடியாகப் பதிலளிக்கவில்லை என்றாலும்கூட.

சில பெண் விமர்சகர்கள் மிக முக்கியமான ஒரு கருபொருளை விளையாட்டுத்தனமாக



promising young woman படத்தில் கேரி முல்லிகன்

உருவாக்கியிருப்பதாகக் கருத்து தெரிவித்திருந்தனர். அதுகுறித்து என்ன நினைக்கிறீர்கள்?

எமரால்டு: பெருவாரியான விமர்சனம் ரொம்பவும் நெகிழ்வூட்டக்கூடியதாகவும் நேர்மறையாகவும் இருந்தது. ஆனால், இதுபோன்ற ஒரு கருபொருளைத் திரைப்படமாக உருவாக்கும்போது அது எல்லோருடைய தனிப்பட்ட அனுபவத்தையும் உள்ளடக்கியிருக்காது என்பது புரிந்துகொள்ளக்கூடியதுதான். சிலருக்கு இத்திரைப்படத்தைப் பார்ப்பது மிகவும் கடினமானதாக இருந்திருக்கக்கூடும். அதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது, அவர்களால் இத்திரைப்படத்தை விரும்ப முடியவில்லை என்பதை என்னால் முழுமையாகவே புரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் அவ்வாறு உணர்வதற்கு நியாயமான, பெரும்பாலும் தனிப்பட்ட காரணங்கள் உள்ளன - அவையும் இக்கருபொருளின் ஓர் அங்கம்தான். இந்தத் திரைப்படம் ஒரு தனிப்பட்ட பெண்ணின் அனுபவங்களின் அடிப்படையிலானது. இதை உலகளவில் எல்லோருக்கும் பொருந்தக்கூடிய படைப்பாக உருவாக்க வேண்டும் என்று ஒருபோதும் எதிர்பார்க்க முடியாது. இதற்குக் காரணம் என்னவென்றால், நீங்கள் அத்தகைய திரைப்படத்தை உருவாக்கினாலும், அதிலும் மிக முக்கியமான பல கேள்விகள் விடுபடவே செய்யும். பெண்களின் கதைகளைப் பற்றிப் பேசுவது ரொம்பவும் கடினமானது. அமுக்கப்பட்ட நிலையில் இருந்து வெளியேறி பேராளுமையாக ஒருவர் உணர்வது சாதாரணமானது அல்ல. அதில் மிகப் பெரிய அவஸ்தைகள் இருக்கின்றன. நாம் உரையாடிக் கொண்டிருக்கும் இவ்வுலகில் சில விஷயங்கள் ரொம்பவும் சாத்தியமற்றதாகவும் குரூரமானதாகவும் கடினமானதாகவும் சிக்கல் நிரம்பியதாகவும் இருக்கின்றன. அதனால் எல்லா நேரங்களிலும் நாம் அவ்வாறே இருக்க முடியாது.

பெரும்பாலான விமர்சனங்கள் சாதகமாகவே இருந்தன. ஆனால், கேரி, டென்னிஸ் ஹார்வியின் விமர்சனத்தில் உங்கள் தோற்றத்தை வர்ணிக்க அவர் பயன்படுத்தியிருந்த வார்த்தைகள் குறித்து உங்களுக்கு மாற்றுக் கருத்து இருந்தன, அல்லவா?

கேரி: அதுகுறித்துச் சொல்ல வேண்டிய அனைத்தையும் நான் முன்பே தெரிவித்துவிட்டேன் என்றே கருதுகிறேன். என் பதிலுரைப்பில் நான் குறிப்பிட்டிருந்த சில விஷயங்கள் பேசுபொருளாக ஆகிவிட்டன. ஆனால், என்னுடைய நோக்கமென்பது ஊடகத்தில் பெண்கள் எவ்வாறு அணுகப்படுகிறார்கள் என்பது குறித்துப் பொதுப்படையாகப் பலவற்றைப் பேச வேண்டும் என்பதே. எனது எதிர்வினை அந்தக் குறிப்பிட்ட இதழியலாளருக்கு எதிரானதாக மாறிவிட்டது. அது அப்படி இல்லை. அது இன்னும் பரந்த தளத்திலானது.

ஹார்வியின் பதிலைப் படித்தீர்களா? [தன்னுடைய நோக்கங்கள் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருப்பதாக அதில் அவர் தெரிவித்திருக்கிறார்]

கேரி: வாசித்தேன். ஆனால், அது அவரைப் பற்றியது அல்ல. என்னைப் பற்றியதும் அல்ல. திரைப்படத்தில் பெண் தொடர்பான விஷயங்கள் என்னவிதமான வழிமுறையில் பேசப்பட்டிருக்கின்றன என்பது குறித்தும் நாங்கள் அதை எப்படிக் கையாண்டிருக்கிறோம் என்பது குறித்தும் அதில்

என்ன செய்தி சொல்லப்பட்டிருக்கிறது என்பது குறித்தும்தான் நான் உரையாட விரும்பினேன். இந்தத் திரைப்படத்தின் சாரம்சத்தின்படி பார்க்கையில், ஒருவர் எப்படித் தோற்றமளிக்கிறார் என்பது குறித்துக் கருத்துரைப்பது இந்தக் கதைக்குப் பொருத்தமான ஒரு விமர்சனம் அல்ல. ஆனால், நான் ஆன்லைனில் இல்லை, சமூக ஊடகத்திலும் நேரம் கழிப்பதில்லை. என்னால் அப்படி நேரம் செலவிடவும் முடியாது - வாழ்க்கை ரொம்பவும் குறுகியது.

**நாம் தொடக்கத்திற்குத் திரும்புவோம், இந்தத் திரைப்படத்தை உருவாக்குவதற்கு முன்பு நீங்கள் இருவரும் சந்தித்திருக்கிறீர்களா?**

**கேரி:** இத்திரைக்கதையை முதலில் வாசித்தபோது, எங்கள் இருவருக்கும் இடையில் மிகச் சிறிய ஒரு சந்திப்பு மட்டுமே நிகழ்ந்திருக்கிறது என்று எண்ணியிருந்தேன். ஆனால், படப்பிடிப்புக்கு 3 வாரங்களுக்கு முன்னதாக, நாங்கள் இருவரும் எங்களுடைய 19வது வயதிலேயே சந்தித்திருக்கிறோம் என்பதைக் கண்டுப்பிடித்தோம். அது Trial & Retribution: Sins of the Father தொடரின்போது நிகழ்ந்திருக்கிறது.

**எமரால்டு:** அதில் கேரி கொலை செய்யப்படுவாள்...

**கேரி:** நான் கிரெக் வைஸின் மகளாக நடித்திருந்தேன். மைக்கேல் ஃபாஸ்பெண்டர் புலனாய்வாளராக நடித்திருப்பார், அது ரொம்பவே அற்புதமானது.

**எமரால்டு:** நான் எப்போதும் ஒழுக்கக்கேடான தோழியாகவே நடித்துவந்தேன்.

**கேரி:** அதில் ஒரு காட்சியில் நானும் எமரெல்டும் நடித்திருக்கிறோம். எங்கள் இருவருக்கும் கருத்து வேறுபாடு உண்டாகிறது. அதனால் எமரால்டு என் மார்பில் கைவைத்து தள்ளுகிறாள். ஆனால், நாங்கள் இருவரும் அக்காட்சியில் ஒன்றாக நடித்திருந்ததை மறந்துவிட்டோம்.

**எமரால்டு:** ஏனெனில் அந்த வயதில் நீங்கள் ரொம்பவும் பதட்டமாக உணர்வீர்கள். நடிப்பது என்றால் இப்போதும் எனக்குப் பதட்டமாகத்தான் இருக்கிறது. ஆனால், அவ்வயதில் அவ்வனுபவம் ஏதோ புயலில் சிக்கிக்கொண்டதைப் போல இருந்தது.

**இதுபோன்ற ஒரு கதாபாத்திரத்திற்கு எப்படித் தயாரானீர்கள்?**

**கேரி:** Promising Young Women திரைக்கதையை வாசித்தபோது Parasite திரைப்படத்தைப் பார்க்கும்போது நீங்கள் எப்படி உணர்வீர்களோ அதே மனநிலைதான் எனக்கு உண்டானது. தொடர்ச்சியாக, தவறான திசையில் கால் வைத்துவிட்டு, 'என்ன செய்துகொண்டிருக்கிறோம் நாம், என்ன அது?' என்று சொல்வோம் இல்லையா, அப்படித்தான் இருந்தது. இதை நேர்மறையாகவே சொல்கிறேன். ஒரு நல்ல திரைக்கதையை வாசிக்கும் தருணத்தில் எல்லாம், எனக்கு என்ன தோன்றுமோ அதேதான் இதைப் படிக்கும்போதும் தோன்றியது: வேறு யாராவது இந்தக் கதாபாத்திரத்தில் நடித்துவிட்டால் நிச்சயமாக அது என்னை சோர்வுக்குள்ளாக்கும். நான் இக்கதாபாத்திரத்தில் எப்படியாவது நடித்தே ஆக வேண்டுமென்று விரும்பினேன். ஆனால், அதை எப்படிச் செய்வது/ எப்படி அணுகுவது என்று எனக்குத் தெரிந்திருக்கவில்லை. சில காலமாக, நான் 'அம்மா' கதாபாத்திரத்தில் நடித்துக்கொண்டிருந்தேன். Wildlife திரைப்படத்தில் எனக்கு இளம் வயதுடைய மகன் இருக்கிறான், Mudbound திரைப்படத்தில் ஒரு குழந்தை இருக்கிறது, அதோடு நான் 'டென்னிஸ் கெல்லி மோனோலாகிலும்' நடித்துவருகிறேன். அதில் எனக்கு இரண்டு குழந்தைகள். அதன்பிறகு, திடீரென 'குழந்தைகள் பிறப்பதற்கு முந்தைய காலத்தைச் சேர்ந்த பெண்ணாக எனக்கு ஏதேனும் கதாபாத்திரம் கிடைக்காதா?' என எதிர்பார்த்துகொண்டிருந்தேன். அவ்வுணர்வு குறித்து பெரிதாக வெளிப்படுத்த அதிகம் இருக்கவில்லை என்றாலும், இத்திரைக்கதையை வாசித்தபோது 'ஆஹா.. நான் திரும்பவும் அந்தக் காலத்திற்குத் திரும்பப் போகிறேன்' என்று கருதினேன். 'இதை எப்படிச் செய்வது' எனும் உணர்வை உண்டாக்கும் பல கூறுகள் அத்திரைக்கதையில் இருந்தன.

**எமரால்டு:** நான் ரொம்பவும் மேலோட்டமாகவே இருந்தேன். அதனால், நகங்களில் செய்யப்படும் ஒரு குறிப்பிட்ட வகையிலான ஒப்பனை சார்ந்த புகைப்படங்களைக் கேரிக்கு அனுப்பியபடியே இருந்தேன். கோபமாக இருப்பது குறித்து இருவரும் நிறைய உரையாடினோம். ஒரு பெண்ணாக இருக்கும்போது, நீங்கள் அதிகம் கருத்தில் எடுத்துக்கொள்ளாத சில உணர்ச்சிகள் இருக்கவே செய்கின்றன. கோபம் அதில் ஒன்று. ஏனெனில், ஒரு பெண் மையத் திரைப்படத்திற்கான கதையை எழுத உட்காரும்போது அதை நாம் ஒருபுறமாக ஒதுக்கி வைத்துவிடுகிறோம்.

**கேரி:** பின்னோக்கிப் பார்க்கும்போது, கதாபாத்திரங்களுக்காக நான் மிக ஆழமாக ஆய்வு செய்தது எல்லாம் என்னுடைய இளம் வயதில்தான். ஏனெனில், பள்ளி காலத்தில் நான் நாடகங்கள் எதிலும் நடித்ததில்லை. அதனால், நடிப்புத் துறைக்கு நான் தகுதியற்றவள் என்றே அப்போது கருதிவந்தேன். 18 வயதில் நான் நடிக்க வந்தேன், அப்போது நான் நடித்துவந்த கதாபாத்திரங்கள் குறித்த புரிதல் எனக்கு இருக்கவில்லை. சில நேரங்களில் ஒரு கதாபாத்திரத்தின் சில அம்சங்களை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும். மொழி, குதிரை ஏற்றம் போன்றவை. இவை தவிர, ஒரு கதாபாத்திரத்தைச் சிந்தித்துப் பார்ப்பதுதான் மிகவும் முதன்மையானது என்கிற அறிதல் இப்போது எனக்கு அதிகரித்தபடியே இருக்கிறது. எனக்கு மிகவும் பிடித்த அணுகுமுறை என்பது இயக்குநர்களுடன் நீண்ட



நெடிய உரையாடல்களில் பங்குபெறுவதுதான். அந்த உறவு உறுதியானதாக இருக்கும்போது, உங்களால் இயக்குநருடன் மணிக்கணக்காகப் பேசிப் பேசி அந்தக் கதாபாத்திரத்தை அடையாளம் காண முடிகிறபோது, இதே அணுகுமுறை குறிப்பிட்ட அளவில் சக நடிகர்களுடனும் செய்ய முடிகிறபோது, நாம் ஏற்கும் கதாபாத்திரம் முழு உருவத்தை எட்டுவதாக இருக்கிறது. நிஜத்தில் உள்ள யாரோ ஒருவரை நான் போலி செய்யவில்லை. அதனால், ஆய்வு செய்வதைவிட கண்டுப்பிடித்தல்தான் இங்குத் தேவையாக இருக்கிறது. விவரிக்க முடியாத ஒரு நட்பில் இருந்தும், பேரன்பில் இருந்தும்தான் இந்தப் படத்தின் முழு கதையும் தொடங்குகிறது, அந்த நட்பும் அன்பும் இனி இல்லை என்றாகும்போது அவள் என்ன செய்யப் போகிறாள் என்பதாக அது பயணிக்கிறது.

எமரால்டு: கேஸி மன்னிக்க விரும்புகிறாள். தம்முடைய தவறை ஒப்புக்கொண்டு அதற்காக மன்னிப்பு கேட்கின்ற ஒருவர் அவளுக்குத் தேவைப்படுகிறார். உங்கள் தவறுகளை ஒப்புக்கொண்டு அதற்கான பரிகாரத்தைச் செய்தால், உங்களுக்கு மன்னிப்பு வழங்கப்படும் என்பதுதான் எல்லா மதங்களின் அடிப்படையாகவும் இருக்கிறது. குற்றத்தை ஒப்புக்கொள்ளாமலும் பரிகாரம் தேடாமலும் தங்களுடைய குற்றங்கள் மறக்கப்பட வேண்டும் என்று பலர் விரும்புகிறார்கள்.

**இந்தத் திரைப்படத்தை உருவாக்கும்போது ஒரு பெண்ணியவாதியாக உங்களுக்கு ஏதேனும் பொறுப்பு இருப்பதாக உணர்ந்தீர்களா?**

கேரி: படத்தில் கேஸி என்ன அனுபவத்திருக்கிறாளோ அதை நானும் அனுபவத்திருக்க வேண்டும் என்கிற அவசியமில்லை. ஆனால், அவளுடைய உணர்வுகள் மிகத் துல்லியமாக வெளிப்பட வேண்டும் என்று கருதினேன். ஏனெனில், இத்தகைய அனுபவத்தைப் பெற்றிருப்பவர்கள் என்னுடைய உணர்வு வெளிப்பாடுகளை நம்ப வேண்டும். இந்தப் பாத்திரத்தை ஏற்கும்போது இதுதான் நீங்கள் செய்ய விரும்பும் கடைசி செயலாக இருக்க முடியும். அதனால்தான், இத்திரைப்படத்தில் உள்ளதுபோன்ற சம்பவங்களுடன் தொடர்புடைய யாருடனும் நான் உரையாட விரும்பவில்லை. ஒரு படத்திற்காக, நிஜத்தில் அப்படி நடந்த சம்பவங்களை என்னிடம் தெரிவிக்கும்படிச் செய்து அவர்களை மீண்டும் அந்த வலியை அனுபவம்கொள்ள ஒருபோதும் யாரையும் நான் உட்படுத்த மாட்டேன். இந்தத் திரைப்படத்தில் சில விஷயங்கள் மிகைப்படுத்தப்பட்டிருக்கலாம், ஆனால், உண்மை என்னவெனில், இதுபோன்ற சூழல்கள் ரொம்பவும் பொதுவானவைதான், படத்தில் நடப்பது துயரம் தோய்ந்த யதார்த்தத்தின் பிரதிபலிப்பே ஆகும். இதுகுறித்து நீங்கள் ரொம்பவும் தெளிவுடன் இருக்க வேண்டும்.

எமரால்டு: படைப்பாக்கச் செயல்பாடுகளில் ஈடுபடுவது ரொம்பவே முக்கியமானது எனக் கருதுகிறேன். அதுஇப்போதுசற்றேஅதிகரித்திருக்கிறது. நமக்கு வாய்ப்பு வழங்கப்பட்டால், அதைப் பற்றிக்கொண்டு உடனடியாக நாம் செயலில் இறங்க வேண்டும். பெண்களைப் பொறுத்தவரையில் பழிவாங்கல் எனும் உணர்வு எப்படி இருக்கிறது, வன்முறை எப்படித்தோற்றமளிக்கிறது, அவ்வப்போது இந்த உலகம் எந்தளவிற்கு மோசமானதாகத் தோன்றுகிறது என்பது குறித்து நேர்மையாக ஒரு திரைப்படத்தை உருவாக்க வேண்டும் என்கிற பொறுப்புணர்வு எனக்கு இருந்தது. என் உணர்வின்படி, சரியாக இத்திரைப்படம் உருவாக்கப்பட்டால், அடுத்த முறை இரவு விடுதியில் மதுபோதையில் இருக்கும் ஒரு பெண்ணைப் பார்க்கும்போது, ஒருவர் ஒன்றுக்கு இருமுறை அவளை நெருங்குவது குறித்து யோசிக்க வேண்டும் என்று விரும்பினேன்.

ராம் முரளி <raammurali@gmail.com>

# பெருங்கடல் பற்றிய சில சிறு குறிப்புகள்

**வலங்கைமான் நூர்தீன்**

**ஓவியம்:** Christine Bell



1

இந்தக் கடல் ராத்திரி
மிக வலுவானதாக இருக்கிறது.
இருள் தன் போர்வையை அலைகள் மீது
போர்த்தினாலும்,
ச்சோவென தன் நுரைப்பொங்கும் நாவால்
இரவை மிடறு மிடறாக ருசித்துக்கொண்டிருக்கிறது.
சமுத்திரம் ரௌத்திரம் வெளிப்படுத்தும் வரை
அலைகளே, அலைகளே அதன் தாகம் தணியுங்கள்.

2

சமுத்திர வாசனையை சுவாசித்த கடற்காகம்
நம் திசை நோக்கி திரும்புகிறது.
நான் ஒரு மாலுமியாகும் பட்சத்தில்
உன் கண்களின் ஆழியில்
என் கப்பலை செலுத்துவேன்.
காற்றின் வேகத்திற்கு இணையாகும் பறவையே
இன்னும் சற்று உயரேப் பற.
அமைதிக் கடலான அந்த நீல வானத்தில்தான்
பாய்ச்சப்போகிறேன் நங்கூரத்தை.



3

சமுத்திரம் எப்போதும் அமைதியாக இருப்பதில்லை.
அதன் ஆக்ரோஷம் நிலத்தை விழுங்கி பசியாறும்,
உயிர்களைக் குடித்து தாகம் தீர்க்கும்.
கொடுரமான கடல் தன் முகத்தை காட்டும் நேரம்,
சூறாவளிக் காற்று வீசும் எதிர் திசையில்
படகை செலுத்திக்கொண்டிருப்பவன்
கரைக்கு திரும்பி வலையை விசிறுகையில்
வந்து விழுகின்றன அவனுக்கான பிரார்த்தனைகள்.

4

கடல் பறவையின் பாடலென்பது
அலைகளின் இரைச்சலைத் ஒத்திருக்கிறது.
அதன் இசைக்கு துள்ளிக் குதிக்கும் மீன்கள்
வானத்தில் பறக்க எத்தனிக்கின்றன.
அக்கணத்தில் தாழ இறங்கும் பட்சிகளை
ஆழி தன் அலைக்கரங்களால் ஸ்பரிசித்துப் பார்க்கும்.
ஈரம் சுமந்து உயரே சென்று சிலுப்பிவிடும்
அந்த ஆனந்தம் பகிரவே
கரைக்குத் திரும்பி நம்மையும் நனைக்கிறது.

5

பாறைகளின் ஈரமான பக்கங்களை
காற்று புரட்டி புரட்டி வாசித்து
ஆகாயத்திற்கு அனுப்புகிறது.
கடற் சீற்றம் வானம் மட்டுமே அறிந்த இரகசியம்.
ஆழியின் சூறாவளியையும்,
காற்றழுத்த தாழ்வு மண்டலத்தையும்
தன் இருண்ட முகத்தால்
வானிலை அறிக்கையாக எச்சரித்துவிட்டு,
தன் அன்பை ஈரமாக பொழிந்து
சமாதானப்படுத்தி வெப்பம் தணிக்கிறது.

**வலங்கைமான் நூர்தீன் <nfayha@gmail.com>**

# அப்பா

## சுஜாதா செல்வராஜ்

தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் குறித்த நேரத்திற்கு நான்காவது நடை மேடைக்கு வந்து சேர்ந்தது. மலர் அரைமணி நேரம் முன்னதாகவே ஸ்டேஷனுக்கு வந்து உட்கார்ந்திருந்தாள். போன முறை ஊருக்குப் போகும் போது, 'ஸ்டேஷன் போக அரைமணி நேரம் தான் ஆகும்; 9 மணி வண்டிக்கு 8.30க்கு கிளம்பினால் போதும்' என்று அசால்ட்டாக இருந்து, ஆட்டோ கிடைக்காமல் அல்லாடி, ட்ரெயின் கிளம்ப போகும் கடைசி நிமிடத்தில் ஓடி வந்து ஏறினாள். அப்பாவுக்கு எங்கு போவதாக இருந்தாலும் அரைமணி நேரம் முன்னதாகவே கிளம்பி விடவேண்டும். கடைசி நிமிட பதற்றம் அவருக்கு அறவே ஆகாது. வீட்டில் எல்லோரையும் அப்படித்தான் பழக்கப்படுத்தினார். மலர் அந்தப் பழக்கத்தை திருமணத்துக்கு பிறகும் கடைபிடித்தாள். கடந்த முறை தான் கொஞ்சம் அசந்து இருந்துவிட்டாள்.

பெட்டியில் ஏறி சீட் நம்பரைத் தேடினாள். ஏற்கனவே ஒரு கணவன் - மனைவி குழந்தையுடன் அமர்ந்திருந்தனர். மனைவி, குழந்தையுடன் ஜன்னலோரம் அமர்ந்திருக்க, அவள் கணவனுக்கு அடுத்து மலர் போய் அமர்ந்தாள். "நான் வேணா இடம்மாற்றி உட்கார்ந்து கொள்ளவா" என்று கணவன் எழுந்து ஜன்னல் பக்கம் உட்காரலாம் என்று குழந்தையை வாங்க முயல, குழந்தை அதன் அம்மா மடியையும் விடாமல் ஜன்னல் கம்பியையும் விடாமல் கத்தியது.

"இல்ல பரவால்ல இருக்கட்டும், நீங்க இங்கேயே உட்காருங்க" என்று சொல்லிவிட்டு மலர் ஃபோனை பார்க்க ஆரம்பித்தாள். அந்த பெண்ணின் கணவனும் சமாதானம் ஆகி மலர் அருகில் அமர்ந்துகொண்டான். மலருக்கு அப்பா நியாபகம் வந்தது. லேசாக புன்னகைத்துக் கொண்டாள்.

ஊரில் அப்பா என்றால் அனைவருக்கும் பயம், குறிப்பாக வயசு பசங்களுக்கு. சும்மா ரோட்டில் பேசிக்கொண்டு நடக்கும் போது கூட தலையை வீட்டிற்கு எதிர் பக்கம் திருப்பிக்கொண்டு தான் நடப்பார்கள். ஒரு முறை பஸ்ஸில் கிளினர் பையன், அவன் மலருடன் பத்தாம் வகுப்பு வரை படித்தவன், மலரைப் பார்க்கவும் 'எங்க திருச்சிக்கா' என்று கேட்க இவளும் தலையாட்ட, ஒரு ஆர்வத்தில் கண்டக்டரிடம் டிக்கெட்டை



வாங்கி, அவள் அப்பா இருப்பதை கவனிக்காமல் மலர் கையில் கொடுத்துவிட்டான். அன்று அப்பா போட்ட சத்தத்தை அவன் வாழ்நாளில் மறக்க மாட்டான். பஸ்ஸே அலசு வாங்கிவிட்டது. அவர் எப்போதும் இப்படித்தான். எல்லாவற்றிற்கும் பெருங்குரலெடுத்து கத்துவார். அவர் கத்தும் போது அம்மா வாயே திறக்க மாட்டாள். அவரை அம்மா எதிர்த்து பேசும், திட்டும் நேரம் என்றால், அது அவர் குடித்திருக்கும் நேரம் தான்.

அப்பா குடிக்க ஆரம்பித்தால் வாரக்கணக்கில் தொடர்ந்து குடிப்பார். சோறு தண்ணி இல்லாமல், பல்லு விளக்காமல், குளிக்காமல், தெளியத் தெளிய குடித்துக்கொண்டே இருப்பார்.

"உங்கப்பனுக்கு மாடு கட்டத் தெரியாது, கரை இழுக்கத் தெரியாது, தென்ன மரம் ஏறத் தெரியாது, எப்படி குடிக்கனும்னு கூடத் தெரியாது. அந்த லட்சணத்துல உங்க ஆயா மவன வளத்து வச்சிருக்கு" என்று அடிக்கடி சொல்லுவார்.

"இப்படி காட்டுக்கு கூட போகாம வாரக்கணக்குல குடிச்சுட்டு கெடக்குறியே நீயெல்லாம் ஒரு குடியானவனா?."

"குடிச்சுட்டு ரோட்ல உழுந்து கெடக்குறியே உனக்கு வெக்கமா இல்ல?."

"பெரியவங்க பேரக் கெடுக்க இந்த ஊட்ல வந்து பொறந்தியே... உனக்கு ஒரு கேடு காலம் வராது."

இப்படி அம்மா அவரைத் திட்டிப் பார்த்துக்கொள்வாள். அவர் தெளிவாக இருக்கும் போது யாரும் வாய் திறக்க முடியாது.

ஒரு முறை இதே போல ஒரு வாரமாகக் குடித்துக் கொண்டிருந்தார். அன்று அம்மாவுக்கு தோட்டத்தில் அதிகம் வேலை இருக்கவில்லை. காலையிலேயே போய் மாடுகளுக்குத் தண்ணி காட்டி இடம் மாற்றி கட்டி தீனி போட்டுவிட்டு கொஞ்ச நேரம் வரப்பில் புல் அறுத்துப் போட்டுவிட்டு வீட்டிற்கு வந்துவிட்டாள். இனி வெயில் தாழ பால்காரர் வர்றப்போ போனா போதும்.

அவள் உளுந்தை திருவையில் போட்டு நெரித்துக் கொண்டிருந்தாள்.

மலர் தையல் கிளாஸ் போய்விட்டு வீட்டிற்குள் நுழைந்தாள். காலேஜ்



முடித்துவிட்டு உள்ளூரிலேயே தையல் வகுப்பில் சேர்ந்திருந்தாள் அவள். வாசலிலேயே சாராய வாடை மூக்கை அறுத்தது. அவளுக்கு இந்த வாடையிலேயே இருக்க பழகிவிட்டது. ஹாலில் அப்பா படுத்திருந்தார். கால்களால் உதைத்து உதைத்து கயிற்றுக் கட்டிலில் கயிறெல்லாம் பிரிந்து அவர் கால் கீழே தொங்கிக்கொண்டு இருந்தது. வேட்டி அவிழ்ந்து கிடக்க அவர் ட்ராயருடன் படுத்துக் கிடந்தார். மலர் அவர் மேல் உள்ள கோவத்தில் நான்கு நாளாய் அவர் கிட்டயே போகாமல் இருந்தாள். இன்று அப்படி போக முடியவில்லை. கோபமாகப் போய் வேட்டியை எடுத்து இடுப்பை மூடிவிட்டு நேராக அம்மாவிடம் போனாள்.

“ம்மா... அப்பா வேட்டிலாம் அவுந்து கெடக்கு.”

“நா என்னா பண்ணட்டும், அந்த மனுசன்ட கெஞ்சி பாத்துட்டேன், அழுது பாத்துட்டேன், திட்டியும் பாத்துட்டேன். காதுலயே வாங்காம இப்படி குடிச்சு அழிஞ்சா நா என்ன தான் பண்ணட்டும்? சாவலாம்னு போனா அந்த சாவு கூட வரமாட்டேங்குதே.”

அம்மா இப்படி அழுவது புலம்புவது புதிதல்ல.

“சரி வாங்கம்மா அவர போய் குளிக்க வைக்கலாம்.”

“குளிப்பாட்டி என்ன பிரயோஜனம்? மறுபடியும் போய் குடிச்சுட்டு உருல தான் போறாரு.”

“பரவால்ல வாங்க.”

இருவருமாக போய் அவரைக் கட்டிலில் இருந்து இறக்கி நிறுத்தினர். வேட்டி மறுபடியும் நழுவியது. அம்மா திட்டிக்கொண்டே இறுக்கிக் கட்டிவிட்டாள். பாத்ரூமுக்கு அழைத்து வர பெரும் பாடு ஆனது. குளித்தால் போதை தெளிந்துவிடும் என்ற தெளிவு மட்டும் இருந்தது அவருக்கு.

“இப்ப எதுக்கு குளிக்க சொல்றீங்க? நான் நல்லா தான் இருக்கேன்.”

“அப்பா, வாய் வாடை அடிக்குதுப்பா... பல்லு கூட வெளக்கல நீங்க. பேசாம வாங்க.”

“சரி நான் பல்லு வெளக்கிக்கறேன், நீங்க போங்க.”

இவர்களைத் தள்ளிவிட்டு தனியே தள்ளாடினார்.

மலர் பலகைக் கட்டையை எடுத்து போட்டாள்.

“ப்பா உட்காருங்க பேசாம.”

மலர் சத்தமாக கத்தினாள்.

அவர் தெளிவாக இருக்கும் போதும் அவரிடம் எதிர்த்து சண்டை போடுபவள் மலர் மட்டுமே. “எனக்கு பொண்டாட்டி கிட்ட கூட பயமில்ல... மவ கிட்ட தான் பயம்” என்று அடிக்கடி சொல்லுவார்.

அம்மா அவர்களை விட்டுவிட்டு உளுந்து உடைக்கப் போனாள்.

அவர் தலை தொங்கிக்கொண்டு இருந்தது. பிரஸில் பேஸ்ட்டை போட்டு மலர் அவருக்கு பல் துலக்கி விட ஆரம்பித்தாள். "குடுமா நான் வெளக்குறேன்." அவர் கை காற்றில் அலைந்தது.

பேசாம இருங்க... பல்லை பிரஷ் வைத்து நன்றாக தேய்த்தாள். வாயில் தண்ணீரை ஊற்றினாள். அவர் அரைகுறையாய் கொப்பளித்து மடியிலேயே துப்பிக்கொண்டார்.

தண்ணியை மொண்டு தலையில் ஊற்றினாள் மலர்.

"ம்மா... ஏம்மா தண்ணிய ஊத்துற. நான் தான் குளிக்க வேண்டாம்னு சொன்னேன்ல! சே... பிள்ளையா நீயி." அவர் திட்டிக்கொண்டே எழுந்துகொள்ளப் பார்த்தார். மலர் அவர் தோள் பட்டையை அழுத்திப் பிடித்தபடியே தண்ணீரை மொண்டு மொண்டு தலையில் ஊற்றினாள்.

அவர் கொஞ்சம் நேரம் திட்டிவிட்டு பேசாமல் தலை தொங்க உட்கார்ந்து இருந்தார்.

"என் பிள்ள என்ன குளிப்பாட்டுது... அம்மா... எம்பிள்ள இல்லமா நீ... எங்கம்மா... எங்கம்மா என்ன குளிப்பாட்டுது... என் தாயி நீ." அழுதுகொண்டே, நின்று கொண்டிருந்த மலரின் காலை பிடித்துக்கொண்டார். "என்ன மன்னிச்சிடும்மா... உங்கப்பன மன்னிச்சிடு கண்ணு... அந்த சனியன நான் இனி தொட மாட்டேன். சத்தியமா இனி குடிக்க மாட்டேன். என்ன மன்னிச்சிடு பாப்பா... எஞ்சாமி எங்கம்மா..." அவர் அழுதுகொண்டே புலம்பிக்கொண்டு இருந்தார். மலர் பேசாமல் முதுகுக்கு சோப்பு போட்டு தேய்த்துக் கொண்டிருந்தாள்.

ஈரத்தைத் துடைத்து அம்மா உதவியுடன் ட்ராயரை மாற்றி, வேட்டி கட்டி, சாப்பாடு ஊட்டிவிட்டு, மீண்டும் படுக்க வைத்தாள். ஆனால், அன்று மாலையே மறுபடியும் குடித்துவிட்டு வந்தார்.

அம்மாவுக்கு இதெல்லாம் பழகிவிட்டது. மலருக்கும் அப்பாவைப் பற்றி தெரியும். ஆனாலும் மனசு கேட்காமல் அவருடன் போராடிக் கொண்டிருந்தாள். அவர் தெளிவாக இருக்கும் போது அவரிடம் பொறுமையாக சொல்லிப் பார்ப்பது, அழுது பார்ப்பது, அவர் சட்டையில் இருந்து பணத்தை எடுத்து ஒளித்து வைப்பது என்று என்னென்னவோ முயன்ற படியே இருந்தாள். அவர் மாறவே இல்லை. மலருக்கு கல்யாணம் ஆகியும் குடித்தார்.பேரப்பிள்ளை பிறந்தும் குடித்தார். கடந்த ஒரு வருடமாகக் குடிக்காமல் இருக்கிறார். கிட்னியில் பிரச்சினையாகி கைகால் வீங்கிக்கொண்டு நடமாட்டம் இல்லாமல் படுத்த படுக்கையாகித்தான் குடியை நிறுத்தி இருக்கிறார். உண்மையில் குடி தான் அவரைக் கைவிட்டிருந்தது.

"ம... டீ... கரம் சாயா... கரம் சாயா" என்ற குரலில் மலர் சுயநினைவுக்கு வந்தாள்.

அவளுக்கு கண்கள் நிறைந்து இருந்தது. ட்ரெயினில் யாரும் கவனிக்காத வண்ணம் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

அப்பாவை பார்த்து ஆறு மாதங்கள் ஆகிறது. நினைத்த நேரத்தில் அம்மா வீட்டிற்குப் போகும் தூரத்தில் வாக்கப்படவில்லை. பிறந்த ஊரிலேயே சொந்தக்காரப் பையனுக்கு மலரைப் பெண் கேட்டார்கள். நிறைய நிலபுலன்களுடன் வசதியான குடும்பம். கறி ஆக்குனா கூட ஒரு எட்டு ஓடிப் போய் கொடுத்துவிட்டு வரலாம் என்கிற மாதிரி தூரம்தான். 'பையன் தண்ணி போடுவானோனு சந்தேகமா இருக்கு... வேண்டவே வேண்டாம்' என்று அப்பா சொல்லிவிட்டார்.

"ஓ! இவர் பிள்ள மட்டும் நல்ல புருசனக் கட்டிக்கிட்டு சந்தோசமா இருக்கணும். ஆனா இவர் மட்டும் குடிச்சுட்டு ஊரான் பிள்ளைய கஷ்டப் படுத்துவாராமா?! இருங்க எனக்கும் ஒரு குடிகாரன் தான் மாப்பிள்ளையா வரப் போறான். அப்ப தெரியும் உங்களுக்கு வலி." மலர் பொரிந்து தள்ளினாள்.

மலர் அப்படிச் சொல்லிக்கொண்டே திரும்பி நடக்க, அப்பா வேகமாக வந்து அவள் முதுகில் ஒரு அடி அடித்துவிட்டார். அவள் வாழ்நாளில் அப்பா அவளை அடித்தது அதுவே முதல் முறை, கடைசி முறையும் கூட. மலர் அழுதுகொண்டு சாப்பிடாமல் படுத்துவிட்டாள். அம்மா தான் சமாதானம் செய்து சாப்பிட வைத்தாள்.

அம்மாவோடு அவ்வப்போது ஃபோனில் பேசுவதோடு சரி. படுக்கையில் கிடக்கும் அப்பாவை பீ மூத்திரம் வாரி பார்த்துக் கொள்வதில் அம்மாவின் எஞ்சிய காலம் சென்றுகொண்டு இருக்கிறது.

முன்பெல்லாம் அம்மா சொல்லுவாள், "நட உடையா இருக்கறப்போ இந்த ஆட்டம் போடுறார்ல... முடியாம படுக்கட்டும் அன்னைக்கு இருக்கு இவருக்கு, இடிச்சு இடிச்சு தான் கஞ்சி ஊத்துவேன். வார்த்தைய கடனுக்கு வாங்கியாச்சும் இவர பேசுபேசுன்னு பேசுனாத்தான் என் ஆத்திரம் தீரும்." இதை அடிக்கடி சொல்லுவாள் அம்மா. அப்படி சொல்லித்தான் அப்போதைய ஆத்திரத்தை தீர்த்துக் கொள்வாள்.

இப்போது நிஜமாகவே அப்பா படுத்த படுக்கையாகிவிட்டார். நினைவுகள் கலங்கிவிட்டன. ஆட்களை அடையாளம் காண்பதிலும் குழப்பம் நிகழ்கிறது. அம்மா சொன்னது போல் அவரை

திட்டவில்லை, சபிக்கவில்லை. அருவருக்காமல் பீ அள்ளிப்போட்டுக்கொண்டிருக்கிறாள். பெண்ணின் இந்த அளப்பரிய அன்பிலும் கருணையிலும் தான் பல ஆண்கள் தப்பி உயிர் பிழைத்து வாழ்கிறார்கள் என்று தோன்றுகிறது.

பெண் எப்போதும் மன்னித்தபடியே இருக்கிறாள். அது அவளுக்கு இயல்பு போல் வருகிறது. என்னால் இவ்வளவு சகிப்புத் தன்மையோடு இருக்கமுடியுமா என்று மலர் யோசித்தாள். கண்டிப்பாக முடியாது.

மலர் பையைத் திறந்து தண்ணீர் பாட்டிலை எடுத்துக் குடித்தாள். திரும்பவும் பைக்குள் வைக்கும் போது அதை பார்த்தாள். அம்மா வாங்கி வரச் சொன்னது.

ஃபோனில், “ஊருக்கு வருகிறேன்'' என்று சொன்னவுடன் அம்மா ரொம்ப சந்தோஷப்பட்டார். நிறைய பேசினாள். வழக்கமாக சுருக்கமாகப் பேச்சை முடிப்பவள் அன்று என்னென்னவோ ஊர் கதையெல்லாம் சொல்லிக்கொண்டு இருந்தாள். மலர் தான் பேச்சை முடித்தாள்.

“சரிமா ஃபோன வைக்கவா? வேல கெடக்குது.”

“கண்ணு.”

“சொல்லுங்கம்மா.”

“அது, எப்படி சொல்றதுன்னு தெரில.”

“என்னம்மா? சொல்லுங்க.”

“அது... நீ யூஸ் பண்ணுவல்ல.” ... குரல் கிசுகிசுப்பாக மாறியது.

“எதுத்த வீட்டு டெலிபோன்காரங்க மக மாசமா இருக்கப்ப, ஒருக்க உன்ன கேட்டு, பேர் எழுதி தரச் சொல்லிகொண்டு போய் கொடுத்தேன்ல.”

மலர் கொஞ்சம் யோசித்தாள்.

அது நடந்து பல வருடங்கள் ஆகிறது. அப்போது மலருக்கு திருமணம் ஆகி இருக்கவில்லை. எதிர் வீட்டு பெண் ஓசூரில் கல்யாணம் ஆகிப் போய் வளைகாப்புக்கு அம்மா வீட்டிற்கு வந்திருந்தாள். வயிறு பெரிதாக ஆகிவிட்டதால் கால் இடுக்கில் வளரும் முடிகளை குனிந்து சுத்தம் செய்ய முடியவில்லை என்று அந்தப் பெண்ணின் அம்மா என் அம்மாவிடம் சொல்லி இருக்கிறார். “நம்ம மலரு க்ரீம் மாதிரி என்னவோ யூஸ் பண்றா. அவகிட்ட கேட்டுப் பாக்கறே”ன்னு வந்து பேர் எழுதி வாங்கிப் போனாள். அதை எப்படி பயன்படுத்துவது என்று மலர் அந்தப் பெண்ணுக்குச் சொல்லியும் தந்தாள். அது அனே ஃப்ரெஷ் என்று ஒரு க்ரீம். பிளேடு வைத்து சவரம் செய்யாமல் எளிதாக தேவையற்ற முடிகளை அகற்றும் க்ரீம். மலர் காலேஜில் படிக்கும் போது அது பற்றி அறிந்து வாங்க ஆரம்பித்தாள். அம்மா அதைத்தான் சொல்கிறார்.

“ஆமாம் ஞாபகம் இருக்கு. என்னம்மா அதுக்கு இப்போ?”

“இல்ல... வரப்போ அது வாங்கிட்டு வரியா?”

மலர் அதற்கு மேல் எதுவும் கேட்கவில்லை. சரிம்மா என்று சொல்லிவிட்டாள்.

கிளம்பும் போது மறக்காமல் வாங்கிவிட்டாள். இப்பொழுது வேறு பிராண்ட் வாங்குகிறாள்.

அம்மா அந்த காலத்து பியூசி. புத்தகங்கள் வாசிப்பதில் ஆர்வம். சீரியல் பார்க்கவே மாட்டார். தவறாமல் நியூஸ் பேப்பர் படிப்பார். நாட்டு நடப்பைப் பற்றி பேசுவார். மலரிடம் கற்ற ஆங்கில வார்த்தைகளை பேச்சில் பயன்படுத்துவார். என் அம்மா மற்றவர்களைப் போல் இல்லாமல் வித்தியாசமாக இருக்கிறார் என்று எப்போதும் மலருக்குப் பெருமை உண்டு.

அம்மா இத்தனை காலத்திற்கு பிறகு இப்போது ஹேர் ரிமூவர் க்ரீம் கேட்கிறாரா என்று ஆச்சரியமாக மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

அம்மா வீட்டிற்கு போவது என்பது கருவறைக்கு மீண்டும் திரும்புதல் போல சுகமானது. உடலும் மனமும் தானாகவே ஒரு ரிலாக்ஸ் நிலைக்கு வந்து விடுகிறது.

மலர் கைகால் கழுவிக்கொண்டு அப்பா இருக்கும் அறைக்குப் போனாள். அவர் கண்மூடிப் படுத்திருந்தார். கைகால்கள் வீக்கம் கொடுத்திருந்தது.

“ஏங்க... இங்க பாருங்க யார் வந்திருக்கான்னு.”

அம்மா அவரை உலுக்கி எழுப்பினார்.

லேசாக திறந்திருந்த கடவாயில் எச்சில் வழிந்திருந்தது.

“யாரு?...” அவர் கண்ணை சுருக்கி விரித்து அடையாளம் காண முயன்றார்.

அம்மா, அவரை தூக்கி நிமிர்த்தி சுவற்றில் சாய்த்து வைத்தார்.

“கொஞ்ச நேரம் உட்கார்ந்து இருப்பார். அதிகநேரம் உட்கார முடியறதில்ல. முன்ன குளிக்க வைக்க மெல்ல கைத்தாங்கலா கூட்டிட்டு போவேன். இப்பல்லாம் அதுக்கே யாராச்சும் இன்னொரு ஆளக் கூப்பிட வேண்டி இருக்கு.”

“பாப்பா வா?!.”

மகளை அடையாளம் கண்டுகொண்டார். “மாப்பிள்ளை வந்திருக்காரா?”

“இல்லப்பா... நான் மட்டும் தான் வந்தேன். நல்லா இருக்கீங்களாப்பா?”

அப்பா நல்ல கருப்பு நிறம். நெகு நெகு வென்று அப்படி ஒரு கருப்பு. வெள்ளை வேட்டி சட்டையில் அவர் நடந்து வந்தால் கம்பீரமா இருக்கும். இப்போது அவர் வெளுத்து இருந்தார். நடமாட்டம் இல்லாமல் படுத்த படுக்கையாகிப் போன அவர் உடல் உருமாற்றம் கண்டிருந்தது.

“நல்லா இருக்கீங்களா? உடம்பு எப்படி இருக்குப்பா?” மறுபடி மலர் கேட்டாள்.

“என்னவோ நான் நல்லா இருந்தேன்... ம்ஹ்ம்...”

அவர் லேசாக முனகிவிட்டு கண்களை மூடிக்கொண்டார்.

மீண்டும் அவரைப் படுக்கவைத்துவிட்டு அவர்கள் திண்ணைக்கு வந்தார்கள்.

அம்மா தான் ஆரம்பித்தாள்.

“அத வாங்கிட்டு வந்தியா பாப்பா?”

“ஆமாம் மா... பைல இருக்கு. யாருக்குமா அது? யாரும் மாசமா இருக்காங்களா?”

“இல்ல... அப்பாவுக்கு தான் கண்ணு.”

மலர் இதை சற்றும் எதிர்பார்த்திருக்கவில்லை. அமைதியாக இருந்தாள்.

அம்மா தொடர்ந்தார்;“பிளேடுல எடுக்க முடியல. கைய கால ஆட்டாம இருக்க மாட்டேங்குறார் உங்கப்பா. சமயத்துல தட்டி விட்டுடறார். ஒருக்க காயம் கூட ஆகிடுச்சு. அப்படியே விட்டா படுக்கையிலே கெடக்கறதுக்கு வேர்த்து தொடையில எல்லாம் புண் ஆகிடுது. அதான் இத போட்டு பாக்கலாமான்னு பாத்தேன். கடைல போய் எப்படி கேட்கறது? சங்கடமா இருக்கு. அதான் உன்கிட்ட சொன்னேன்.” மலர் பேசாமல் தலையாட்டினாள்.

மறுநாள் மாலை அப்பாவைக் குளிக்க வைக்கும் முன் அந்தக் க்ரீமை பயன்படுத்தலாம் என்று அம்மா வாங்கிக்கொண்டாள். ஆனால், அதை எப்படி பயன்படுத்துவது என்று தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தாள். அப்பா வேறு கையைத் தட்டிவிட்டுக்கொண்டே திட்டியபடி இருந்தார்.

மலர் எழுந்து அப்பா படுத்திருக்கும் அறைக்குப் போனாள்.

“ம்மா... இங்க குடுங்க.” க்ரீமை வாங்கிக்கொண்டாள்.

“அப்பா... பேசாம படுத்திருங்க ப்பா.”

“வேண்டாம்மா... ஆண்டவனே... ஏம்மா இப்படி தொந்தரவு பண்றீங்க?”

“நான் தானேப்பா... வேர்த்து போய் புண்ணாகுதுல்லப்பா? கம்முனு இருங்க.”

சொல்லிவிட்டு க்ரீமை பிளாஸ்டிக் பட்டையில் எடுத்து அடிவயிற்றுக்கு கீழே தடவத் தொடங்கினாள். அப்பா காற்றில் அலையும் தன் கைகளைச் சிரமப்பட்டு சேர்த்துக் கும்பிட்டு, “அம்மா எங்கம்மா...” என்று அழத் தொடங்கினார்.

சுஜாதா செல்வராஜ் <suji19477@gmail.com>

கவிதை

## அவரவர் விருப்பம்

**காரைக்குடி சாதிக்**

உறங்கும் நேரத்தில்
ஒடிக்கும் முருங்கைக் கீரையை
அவர் திருட்டில் சேர்க்கவில்லை

மாட்டிக்கொள்ளும் நேரத்தில்
வழியும் அசடை
நான் சிரிப்பில் சேர்க்கவில்லை

காற்று வாங்கும்
புதுக் கிழிசல் ஆடையை
அவர் ஏழ்மையில் சேர்க்கவில்லை

கருப்புக் கண்ணாடியில்
மீறப்படும் பார்வையை
நான்
அநாகரீகத்தில் சேர்க்கவில்லை

எந்தச் செயல்
எதற்கானதென்று
யாரும் தீர்மானிக்கலாம்
அவரவர் விருப்பம் போல்.

காரைக்குடி சாதிக்
<sadiqrasool2017@gmail.com>

# நீர் வழிப்படூஉம்

## பொ. கருணாகரமூர்த்தி

நீர்வழிப்படூஉம்'நாவலில்தேவிபாரதிபுதினத்தைஓட்டிச்செல்லும் உத்தியிலும் வாசகனை ஈர்த்துக் கட்டிவைத்திருக்கும் பொறிமுறையிலும் வெற்றியடைகின்றார். படைப்பில் கொங்குப் பிரதேசக்கேயுரிய பொடகாணி, இட்டேறி, ஒப்புட்டு, ஒரெம்பறை என்று ஏழெட்டு வரையிலான சொற்கள் உள்ளனவாயினும் வாசிப்போட்டத்தில் அவை என்னவாயிருக்குமென்று ஊகித்துவிட முடிகிறது. அல்லாவிடினும் நாவலின் வாசிப்பு ஓட்டத்தில் தடையுண்டாக்கவில்லை.

கைவிடப்பட்ட பழைய வீடொன்றில் ஒரு பாத்திரத்தின் இறப்போடும் அதையடுத்து அங்கே செய்யவேண்டிய சடங்குகளுக்கான ஏற்பாடுகளின் சித்தரிப்போடும் புதினம் ஆரம்பிக்கிறது. ஆசிரியர் தன் சிந்தனையை (Flashback) முன்னிகழ்வுகளைக் கால ஆவர்த்தனத்தோடு பதிவதன் மூலம் புதினத்தை விரிக்கின்றார். இறந்துபோகும் அப்பாத்திரமான காரு மாமாவையும் அவர் கணவி ராசம்மாவுடனும் பல்லூர்களிலும் வாழும் அவர்களின் உறவுகளுடனான ஊடாட்டங்களும் சடங்குகளுமென சுற்றிநிகழ்ந்த நிகழ்வுகளுமே இதில் முதன்மையான சித்தரிப்பு. அச்சித்தரிப்பில் கொங்கு நிலப்பரப்பின் நாவிதர்கள் எனப்படும் ஒரு குமுகாயத்தினதும் அவர்கள் வாழ்ந்து தீர்த்த வாழ்வும் சொல்லப்படுகிறது.



ஆசிரியர் காட்டும் 50 ஆண்டுகளுக்கு முன்னதான கொங்குநாட்டுச் சமூகத்தில் ஆண்டான்கள், பண்ணையக்காரர்கள், கவுண்டர்கள், அடிமைகள், குடிமைகள் அனைவருமுண்டு. ஆனாலும் எவரும் எதையும் மாற்றி அமைத்துவிடச் சிந்திப்பதோ எதிர்க் கிளர்ச்சி செய்வதோ இல்லை. ஒரு தேர்தல் காலத்தில் கம்யூனிஸ்ட்டுகள் வந்து கூட்டம் போடுகிறார்கள். அவ்வேளை ஊருக்குள் இருவருக்கிடையே நிகழும் மோசமான கைகலப்பைக் கலைத்துவிடுகிறார்கள். அவர்களது செயற்பாடு அவ்வளவுதான்.

தேவிபாரதி அரவக்குறிச்சி, ஆம்பரந்துறை, அவல்ப்பூந்துறை, சுந்தராடிவலசு, நாயக்கன்வலசு, முத்தையன்வலசு, நாச்சிவலசு, நாச்சிப்பாளையம், கருங்கல்பாளையம், கள்ளிமந்தை, உடையாம்பாளையம், வெள்ளக்கோவில், அரச்சலூர், லோகநதபுரம், கஸ்பாப்பேட்டையென்று நாம் தெரிந்திராத பல ஊர்களை தன் வேகமான எழுத்து முறையினால் புதினத்தின் ஆரம்ப அத்தியாயங்களிலேயே நிறைத்துச் செல்கிறார். அங்கே ஈரோடு, திருச்சி, திருமங்கலம், தாராபுரம் ஆகிய பரிச்சயமான ஊர்களைத் தவிர பிற ஊர்களை நமக்கு மனதில் வைத்துக்கொள்வதும் சற்றே சிரமந்தான். நல்வினையாக அவ்வூர்கள் அனைத்திலும் தவறாது ஒவ்வொரு அத்தைமாரோ, பெரியம்மாக்களோ, பெரியப்பாக்களோ, அண்ணாக்களோ என உறவுகள் இருப்பதால் தப்பித்தோம். எனினும் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு பெரியம்மாக்கள் இருந்ததால் வாசிக்கையில் எவ இவவென்று அவர்களை ஞாபகம் வைப்பதில் கொஞ்சம் சிரமமிருந்தது நிஜம்.



நாவிதர்கள் எனப்படும் இக்குழுமத்தின் உறவுகள் கிளைகளாகப் பிரிந்து பரவி எல்லாவூர்களிலும் வாழ்கின்றார்கள். கதைசொல்லியின் மாமனான காருமாமா எனும் நல்ல மனிதனதும் அவர் கணவி ராசம்மாவினதும் அந்திம காலம் வரையிலான எளிய வாழ்க்கையும் அவர்களைச் சுற்றி நடைபெறும் சடங்குகள், சம்பிரதாயங்கள் உறவுகளுக்கிடையேயான ஊடாட்டங்கள் குதூகலங்கள், அவ்வப்போது இடம்பெறும் சண்டைகள் கொண்டாட்டங்களை வாசகன் சலிப்பின்றித் தொடரும்படியாக தேவிபாரதியின் தூரிகை புதினத்தின் அனைத்துப் பக்கங்களிலும் விளையாடிச் செல்கிறது. ஊரில் கூட்டமாக இருந்த சிறு சமூகமாக வாழ்ந்த இக்குடியினர் வேலைவாய்ப்பு, திருமணம் போன்ற காரணங்களினால் தாம் வாழ்ந்த வீடுகளை ஒவ்வொருவராக அப்படியே விட்டுவிட்டுப் புலம்பெயர்ந்துபோகவும் அக்குறிச்சியே மனிதர்கள் வாழாத ஒரு பாழ்வெளியாக அமைந்துவிடுவதும் பெருஞ்சோகம்.

கவுண்டர்களினதும் பண்ணையக்காரர் களினதும் கிடாய்வெட்டு நிகழ்ச்சிகளில் நாவிதர்களுக்கு கிடாய்களை அறுத்தல், உரித்தலன்ன விசேட குடிமைச் சேவகங்கள் இருக்கின்றன; அவர்களுக்குக் கூலியாக வெட்டப்படும் கிடாய்களின் தலைகளும் குடல்களும் கால்களுமே கொடுக்கப்படுகின்றன. ஆனாலும் அதையிட்டுச் சலிக்காமல் ஒரு கொண்டாட்ட மனோநிலையில் இராஜகாரியங்கள் போலச் செய்து முடிப்பதிலும் அச்சமூகத்தவரின் அப்பாவித்தனங்கள் சித்தரிக்கப்படுகின்றன. மேட்டுக்குடியினருக்குச் சௌவுரம் செய்வதிலிருந்து, இழவு வீடுகளிலிருந்து திருமணம் போன்ற சுபகாரியங்களிலும் சாதகங்களைப் பொருத்தம் பார்க்க ஜோதிடர் வீடுகளுக்கு எடுத்துச் செல்வதிலிருந்து, விருந்துகளுக்கு வேண்டிய தானியங்களைக் குற்றிப்புடைத்துத் தயார் பண்ணுதல், அணுக்கத்தில் தூரத்திலுள்ள உறவினர்களுக்கு வெற்றிலை வைத்துப் பண்ணையக்காரர் சார்பில் அழைத்தல் முதலானவற்றையும் அவர்களே பார்க்க வேண்டியுள்ளது.

கதை சொல்லிக்கு அந்தப் பிராந்தியம் பூராவும் உறவுகள் பரந்து வாழ்ந்திருந்தாலும் அவனை உரிமையோடு 'மாமா' என்று அழைக்கும் மைத்துனிகள் ஈஸ்வரி, சாவித்திரி என்கிற இருவர் மட்டுமே இருப்பதும் அதிசயம்.

கதை சொல்லியின் அம்மா தன் மைத்துனி ராசம்மா மாமிக்கு சிவாஜி -சாவித்திரிக்கு இடையேயான அண்ணன் - தங்கை பாச உறவைப் புரிய வைப்பதற்காக அப்பாசமலர் காவியத்தைக் காட்டத் தவியாய்த் தவிக்கிறார். அம்முயற்சியில் அரச்சலூரில் அச்சித்திரம் ஓடுவதாக ஒருநாள் அறிந்ததும் யாருக்கும் சொல்லாமல் அவளைக்

கூட்டிப்போய் இரவுக் காட்சியைப் பார்த்துவிட்டுப் ஊர் திரும்பப் பேருந்து இல்லாததால் ஒரு உறவினர் வீட்டில் இரவைக் கழித்துவிட்டு வந்தவர், மேற்படி தப்புக்காகக் கணவனிடம் அடியெல்லாம் வாங்குகிறார். ஆனால், பின்னர் கடைசி அத்தியாயமொன்றில் காரு மாமா திருமணமான புதிதில் ராசம்மாவைக் கூட்டிப் போய் 'பாசமலர்' படத்தைப் பார்த்தாரென்றும் சொல்லப்படுகிறது.

நாவலின் தலைப்பு எளியவாசகனை விரட்டும் வகையிலுள்ளது; அதையும் இன்னும் எளிமையாக ரஞ்சகமாக வைத்திருக்கலாம்.

புதினத்தின் நிறைவில் தேவிபாரதி குடும்ப உறவுகளிடையே ஒரு தாய விளையாட்டுக் கச்சேரியை வைத்ததுவும் அப்படிமத்தின் மூலம் அவன் சாவித்திரியைக் கட்டிறானோ ஈஸ்வரியைக்கட்டிறானோ என்று ஒரு சஸ்பென்ஸுடன் முடித்திருந்ததுவும் ரசிக்கக்கூடியது.

பிரதியில் வெகுசில தட்டல்வழுக்கள் இருந்தாலும் பாரிய சொல்லியவழுக்கள் இல்லாதது அதன் சிறப்புக்களில் ஒன்று.

ஒரு குடும்பத்திடையே / குமுகாயத்திடையே என்னதான் முரண்கள், அதகளங்கள், துரோகங்கள் இருந்தாலும் விட்டுக்கொடுத்தல், மன்னித்தல், தாளாண்மை இருப்பின் அன்பென்னும் காலப் பெருநீரோட்டத்தில் அனைத்தும் மெல்லமெல்லக் கரைந்துசென்றுவிடும் என்பதை வாசகன் உணரத்தருகிறார் தேவிபாரதி.

சிறப்பான பொறிமுறையுடனான கட்டுமானமும் மொழியழகும் கலைப்பெறுமதியும் தனித்துவமுமுள்ள புதினம் 'நீர்வழிப்படூஉம்.'

இவ்வாண்டின் இந்திய சாகித்திய அகடெமியின் விருதுக்கு முழுவதும் தகுதியுடையது.

"பொ. கருணாகரமூர்த்தி" <karunah08@yahoo.com>

# மகாராஜா வந்து கொண்டிருக்கிறார்... சொம்பு பத்திரம்



காலபைரவன்

வானம் இருண்டு இடி இடித்து
பேய் மழை பெய்யும் என
வாசியம்மன் அடித்துச் சொன்ன மறுநாளில்
ஊரின் ஏரி குளங்களெல்லாம் கோடி போகத் தொடங்கின.
மழை பொய்த்த நாட்களில்
வராத மகாராஜா இப்போது
மழையின் வருகையை கோலாகலமாக கொண்டாட
பீடத்திலிருந்து இறங்கி வருகிறார்
மந்தவெளியெங்கும் கூத்தும் பாட்டும்
வரிசை கட்டத்தொடங்கிவிட்டன
கட்டியக்காரன் ஸ்த்ரீபார்ட் ராஜபார்ட் என
அனைத்து பாத்திரங்களிலும் அவரே தோன்றுகிறார்
நிகழ்த்துக்கலை நுட்பங்கள் அறிந்தவரின் பாவனையை
ஒத்து இருக்கிறது
அவரது மேடைப் பிரசங்கங்கள்
பார்வையாளர்களை எப்போதும் துச்சமாக எண்ணும் அவர்
ஆட்டத்தின் போக்கை தானே தீர்மானிக்கிறார்.
நிகழ்வின் துவக்கத்தில் மானிடப் பிறப்பாக தோன்றுமவர்
இறுதியில் பரமாத்மாவாக மாறும் அதிசயம் நிகழ்ந்தேறுகிறது
பலகட்டங்களாக நீளும் நாடகத்தில்
எத்தனை வேஷங்கள் தரித்தாலும்
அவர் ஒரு ஏழைத்தாயின் மகன் என்பதை நீங்கள் நம்பினால் போதும்
அவரும் அதைத்தான் விரும்புகிறார்.
திரைக்குப் பின்னிருந்து இயக்குபவர்களும்
ஈரேழு லோகங்களில் பல்லாயிரம் ஆண்டுகளாக
தயாராகிக் கொண்டிருக்கும்
அவர்களின் அரங்கப் பிரதிகளும்
பூடகமாக இருக்கும் வரை
நடப்பது அனைத்துமே நமக்கு நாடகம் தான்.
காந்தாரத்தில் அமர்ந்து கொண்டு
ஏனைய சிற்றரசுகளை கட்டுப்படுத்தும்
மகாராஜாவின் வீர தீர பராக்கிரமங்களை சொல்லி
மகிழ்கிறது காண்பவர் கூட்டம்
இறுதியாக
வருவது ஏழைத்தாயின் மகனாகவே இருந்தாலும்
வாசி தீரவே காசு நல்குவீர் எனும் ஓதுவாரின் குரலைக் கேட்டு
நாளைத் தள்ளும் வக்கற்றவளுக்கு வாய்த்ததெல்லாம்
எஞ்சி இருக்கும் ஒற்றை சொம்பை
அவருக்கு அகப்படாமல்
மறைத்து வைப்பது மட்டுமே.

காலபைரவன் <kalabairavan@gmail.com>

# காகிதப்பூவின் ஏழு நாட்கள்

## த. அரவிந்தன்

பால் பொங்கிப் பொங்கி வழிவது போன்று இருந்த அந்தப் பிரமாண்ட வெண்ணிற பங்களாவாக அவன் இறந்து போனான். இன்னும் இதயநெருக்கமாக, அந்தப் பங்களாவின் பால்கனிகளில் செழித்திருந்த ரோஸ் நிற காகிதப் பூக்களாக அவன் இறந்து போனான்.

மேக மூட்டமும் குளிர்க்காற்றும் இருந்த இளம் காலையில் அவன் சாலையில் நடந்து போய்க் கொண்டிருந்தபோதுதான் அந்தப் பங்களாவைப் பார்த்தான். எப்போதும்போல் சாலையில் தரையைப் பார்த்தவாறேதான் அவன் போய்க்கொண்டிருந்தான். வெண் நிறத்தில் சிலந்தி இழையைப் போல, ஏதோ இடது கண்ணைப் பற்றுவதுபோல இருக்க, நிமிர்ந்து பார்த்தவன், கண்கள், மனம், உடல் எல்லாம் புத்துணர்வாக, அப்படியே நின்றுவிட்டான்.

சாலையின் நடைபாதையில் நின்றுகொண்டு இடது கோணத்தில் இருந்து, பார்க்க முடிந்தவனுக்கு, உயர்ந்த பால் நிற வெளிச்சுவருக்கு மேலாக அந்தப் பங்களாவின் நான்கு பால்கனிகள் மட்டும் தெரிந்தன.

நெடுஞ்சுவருக்கு வெளியே புடைப்பாக ஒவ்வொரு அடுக்கிலும் வட்ட வடிவ தாங்குசுவரால் அந்தப் பால்கனிகள் இருந்தன. சொரசொரப்பான பொடிக் கற்களாலான வட்டச்சுவர்களின் முன்தோற்றத்தின் மையப் பகுதியில் தந்தத்தால் வடிக்கப்பட்டதுபோன்ற வழவழப்போடு, தலையைத் தூக்கி ஓரப்பார்வை பார்க்கும் வெண்குதிரை ஒவ்வொன்றிலும் வடிக்கப்பட்டிருந்தது.

இந்தப் பால்கனி கட்டுமானச் சுவர்களுக்கு உள் பக்கமாக அடியிலிருந்து மேலாக மலர்வனமாக ரோஸ் நிற காகிதப் பூக்கள் செழித்திருந்தன.

இரண்டு மணி நேரம் சலிப்பு இல்லாமல் பால் வண்ணத்துக்கு இடையேயான அந்த ரோஸ் நிறப் பூக்களைப் பார்த்தவாறு மகிழ்ந்திருந்துவிட்டு, நகர்ந்து சென்றவனுக்கு ஐம்பத்தெட்டு ஆண்டுகால வாழ்நாளில் முதல் முறையாக வாழ்ந்தது போல இருந்தது.



மேலும், எல்லாக் கட்டத்திலும் ஏதோவொரு சூழலால் கடத்தப்பட்டவனாகவே இருந்தவனுக்கு, இரண்டு மணி நேரத்தில் எல்லாவற்றிலும் இருந்து விடுதலை அடைந்துகொண்டது போலவும் இருந்தது.

இரண்டாம் நாளும் அங்கு வந்து வாழ்ந்தான். மூன்றாம் நாளும் அங்கு வந்து வாழ்ந்தான். ஒவ்வொரு நாளும் அங்கு வந்து வாழ்ந்து, இறுதியாக ஏழாம் நாளும் வந்து வாழ்ந்து, அந்த இடத்திலிருந்து நகர முற்பட்டபோதுதான் இறந்து போனான்.

முதல் நாளில் இரண்டு மணி நேரமும் யாரும் அங்கு புலப்படாமல் காகிதப் பூக்களை மட்டும் பார்த்துக் கொண்டிருந்தவன், இரண்டாம் நாள் அந்தப் பூக்களைக் காற்று அசைப்பதைப் பார்த்தான்.

மூன்றாம் நாள் இரண்டாம் பால்கனியின் மேலான பூக்களின் மேல் ஒரு வண்ணத்துப் பூச்சி உட்கார்வதும் பறந்து போவதுமாக இருப்பதைப் பார்த்தான்.

நான்காம் நாள் ஒன்றாம் பால்கனியில் பூக்களையொட்டிய சுவரில் ஒரு மரகதப் புறா அதன் இணையை அழைக்கும் முனகல் பாடலைப் பாடியவாறே உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

ஐந்தாம் நாள் மூன்றாம் பால்கனியில் பூக்களையொட்டிய சுவரில் ஒரு மஞ்சள் நிற பூனை அதன் குட்டியைக் கவ்வியவாறே நடந்து போவதைப் பார்த்தான்.

ஆறாம் நாள் நான்காம் பால்கனியின் பூக்களையொட்டிய சுவரோரம் ஒரு சிறுமி புன்னகையோடு பறக்கும் தட்டான் கூட்டத்தைப் பார்த்தவாறே நிற்பதைப் பார்த்தான்.

ஏழாம் நாள்தான் மூன்றாம் பால்கனியில் அதுவரை சிரித்துக் கொண்டிருந்த



பூக்களையெல்லாம் மிரளச் செய்த கடுகடுவெனப் பற்றியெரிந்த ஓர் ஆணின் முகத்தைப் பார்த்தான்.

மிகச் சிறிய வயதிலிருந்தே அவன் முகங்களைப் பார்ப்பதை விட்டுவிட்டான். ஒரு முகத்தை அடையாளத்துக்காக மட்டும் பார்த்து வைத்துக்கொண்டு, அவர்கள் அவனைப் பார்த்து பேசிக்கொண்டிருக்க, அவன் வேறு எங்கோ பார்த்துவாறு கேட்டுக் கொண்டிருப்பான். அவர்களுக்குப் பதில் அளிக்கும் போதும் எங்கோ பார்த்தவாறுதான் பதில் அளித்துக்கொண்டிருப்பான். அந்தச் செய்கை அவனுடைய அன்றாட வாழ்வு எதையும் பாதிக்காத நிலையில், அது அவன் வாழ்நாள் முழுவதுமே தொடர்ந்தது.

அதுவும் வாழ்வின் வழுக்குப் படிகளில் யாரையாவது இடறச் செய்து, அவர்களின் மேல் ஏறி, கடந்து செல்லப் பிடிக்காமல் அந்தப் படிகளில் வழுக்கிக் வழுக்கி வந்து, சாலையில் அவன் காகிதமும், பாட்டில்களும் பொறுக்க ஆரம்பித்த பிறகு அவனுக்கு அறவே முகங்களை அடையாளம் வைத்துக் கொள்ள வேண்டிய தேவையும் இல்லாமல் போனது.

தினந்தோறும் லட்சக்கணக்கான முகங்கள் சாலைகளில் கடந்து சென்று கொண்டிருக்க, தரையை மட்டும் பார்த்துச் செல்பவன் அந்த நாளில் பழைய பேப்பர் கடைக்காரனின் முகத்தை மட்டும் பார்க்கத் தேவை இருப்பதுபோல இருக்கும். சில நேரம் யாராவது உணவுப் பொட்டலம் கொடுக்கும்போது, அவர்களின் முகங்களைப் பார்ப்பது போலவும் இருக்கும். மாதத்தில் ஏழாம் தேதி மட்டும் அவனுடைய மனைவியின் முகத்தைப் பார்க்க வேண்டியது இருக்கும். அதுவும் அதிக நேரம் என்பது இல்லை. இரவில் பஸ் நிறுத்தம் அருகில் வருவாள். பணத்தைக் கொடுக்கும் வரை ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பாள். அவன் எங்கோ பார்த்தவாறு கேட்டுக்கொண்டிருப்பான். கையில் எதுவும் வைத்துக் கொள்ளாமல் பதினெட்டாயிரத்துக்குக் குறைவில்லாமல் அழுக்கு சாக்குப் பையிலிருந்து எடுத்துக் கொடுப்பான். அவள் வாங்கிக் கொண்டு போய்விடுவாள். அவ்வளவுதான். மற்றபடி, முகங்களோடு அவனுக்கு உறவு என்பதே அற்றுப் போய்விட்டது.

பேப்பர் கடைக்காரனின் முகம், அவனுடைய மனைவியின் முகத்தோடும் மட்டும் இப்போது மெல்லிய உறவு இருப்பதுபோல இருந்தாலும், அந்த முகங்கள் காட்டும் கோரங்களையோ, அவனின் முகத்தை எரிப்பது போன்ற நெருப்பையோ சந்திக்க வேண்டியிருந்தது இல்லை. அவன் கழுத்தில் தங்கியிருக்கும் ஏறக்குறைய மறந்தே போய்விட்ட அவன் முகத்தைப்போல அப்படியொரு நெருப்பையே அவன் மறந்து போயிருந்தபோதுதான் மூன்றாம் பால்கனியில் இருந்து பற்றியெரிந்து, அவன் முகத்தை எரிக்க வந்த நெருப்பின் சூட்டை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

ஏழுவயதில் அவனுடைய அம்மா இறந்து, சித்தியின் கொடுமையை அனுபவிக்கத் தொடங்கியதிலிருந்து, அவனுடைய மனைவி இரண்டு பிள்ளைகள் பிறந்த பிறகும் வேறு ஒருவனோடு தொடர்பில் இருக்கிறாள் எனத்தெரிந்து, அவனுடனேயே வாழச் சொல்லிவிட்டு, மாதாமாதம் பிள்ளைகளுக்காகவும் அவளுக்காகவும் பணத்தை மட்டும் தருவது வரையிலும் அவன் பார்க்காத முக நெருப்புகள் இல்லை என்றாலும், அதையெல்லாம் கடந்தவொரு நெருப்பாக அவனுக்கு அது இருந்தது.

ஒரு நாளில் மிகக் குறைவாக இரண்டு மணி நேரமே அங்கு நின்று பார்த்தான் என்றாலும், ஏழு நாட்களும் பால்கனி காகிதப் பூக்களாகவே வாழ்ந்தவனுக்கு அந்த ஏழு நாட்கள் வானத்தை விடவும் அரிதானதாக இருந்தது. எல்லாவற்றிலிருந்தும் விடுதலை பெற்று தந்த அந்த நாட்களின் மீது சிறு கரி படியவும் அவன் விரும்பவில்லை.

பாலாகப் பொங்கி பொங்கி வழிந்த அந்தத் தூய ஏழு நாட்களையும் பாதுகாத்து கொள்ளும் வகையில் அப்படியே காகிதப்பூவாகச் சரிய விழுந்தான்.

த. அரவிந்தன் <thavaram@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

கயல்
ஓவியம்: நடேஷ்



## 34. இல்லுறை தெய்வம்

பிறையளவும்
இளக மறுத்து
பிணங்கி
நிற்கும்
பிரியமே!

கள்ளப் பார்வைகள்
சொல்லில் அடங்காத மூர்க்கம்
வழிவழிப் பெருமை என
இவையெல்லாம் சேர்ந்த
என்னிடம்
வீட்டுப் பிராணிதானே
என்றெண்ணி இயல்பாக
ஒருநாளும் பழகிவிடமுடியாது
என்று அறிவாய்.

வழியில்
எழிலொன்றை
எதிரிடுகையில்
என் ஓரக் கண்
இமைகள்
இச்சையுடன் துடிப்பதை
அறிந்தும்
அறியாதவள்போல
அனுமதித்திருக்கிறாய்
அநேக தடவைகள்.

இன்றோ
மூடிக் கொண்டுவிட்ட
கதவின் பின்
உன் முகம் பார்க்கவும்
தவித்துக் கிடக்கிறேன்.

என் உள்ளத்துள்
உறைந்து கிடக்கும்
கசடுகள் போக்கி
தெவிட்டாத
உன் அன்பின்
உன்மத்தத் தேறல்
புகட்டியவள் நீ.
நின் பூரணத்தின்
தாள் முன்
என் போதாமையின்
சிரம் பணிகிறது.

ஆழ் கடலின்
பேரெல்லையாய்
பெருகி நிரம்பியவுன்
பெண்மையின் பெருமிதம்
கண்டு அஞ்சி நின்றவனை
அள்ளியெடுத்து
ஆட்கொண்டு
அற்புதங்கள் செய்வித்து
ஆணாக்கியவள் நீ!



ஆயினுமென்ன
பிரியம் ஊற்றிவைத்த
உன் இதழ்க் குவளையை
எடுத்துப் பருகும் முனைப்பில்
எதேச்சையாய் உதிர்ந்த
ஒரு சொல்
ஆண் நானென்ற
அகந்தையில் உருப்பெற்ற
ஒரு வார்த்தை
அதன் விளைவை
அறியாமல் உச்சரித்ததற்காகவா
இத் தண்டனை?

இது
நீ நானாகவும்
நான் நீயாகவும்
குணம் மாறும்
அபாயகரமான நேரம்
நம்மில் எவர் தோற்பினும்
இருவருமே பிழைகளாவோம்.

வா
இருவருமாகச் சேர்ந்து
இன்றோர் சொற்களற்ற
இரவினைப் புனைந்து
அதில் அடைக்கலமாவோம்
அறிந்தும் அறியாமலும்
இதுகாறும் செய்த
சிறிதும் பெரிதுமான
எனது தவறுகளுக்கெல்லாம்
இரட்சிப்பை யாசிப்பேன்
மனமிரங்கி அருள்வாய்
என் தேவி!
மீத வாழ்வு முழுமைக்குமாய்.

## 35. கதைச் சுருக்கம்

அன்றெல்லாம்
எக்காட்சிக்கும்அதிசயித்துவிரியுமோர்
பூனைக் குட்டியின் கண்களாக
மினுங்கிக்கொண்டிருந்த
உன் வதனத்தில்
இன்றோ
பழகிய தடத்தில்
நெருக்கடியான இடத்தில்
நடந்து நடந்து கடுக்கிற
பேருந்து நடத்துனரின்
சலிப்பு.

எம்
பெண்களின்
இன்பக் கதைகளானது
இத்தனை விரைவாக
முடிவது எதனால்
என வினவுகையில்
தலை கவிழ்கிற
ஆண் கடவுளிடமிருந்து
தயக்கத்துடன் வருகிறது
ஒற்றை வார்த்தையில்
ஒரு பதில்
வயிற்றுப்பாடு.

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# எனக்கு இறக்கை வேண்டும்

## ஹிந்தியில்: ப்ரதீமா ஸ்ரீவாத்ஸவ்
## தமிழில்: கிருஷாங்கினி

"சன்னி, சன்னி" நான் கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறேன். யாரும் கேட்கவில்லை. திடீரென் மருமகள் அறைக்குள் வந்தாள். எரிச்சலோடு சொன்னாள்: "எல்லோரும் செவிடா என்ன? ஏன் இப்படி கத்துகிறீர்கள். உங்களுடைய இயல்பான குரலே காணாமல் போய்விட்டது. இன்னும் கிழவி ஆகிவிடவில்லை நீங்கள். "

காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினாற்போல இருந்தது. உண்மையில் யாரும் என் மீது அக்கறை காட்டுவதில்லை. எல்லோரும் தத்தம் வேலைகளிலேயே மூழ்கிக் கிடக்கின்றனர். எரிச்சலும் கொபமும் வருவதனால் நான் மெல்லப் பேசுவதையே விட்டுவிட்டேன். நாம் மெல்லப் பேசினால் இவர்கள் கேட்பார்களா என்ன?

சன்னி, மருமகளின் எரிச்சலான குரலைக் கேட்டுவிட்டான். "என்ன ஆச்சு அம்மா?" என்றான். சன்னியின் குரல் அன்பு நிறைந்திருந்தது. அது என் கோபத்தையெல்லாம் காணாமல் போக்கிவிட்டது. சன்னி சொல்லிக் கொண்டிருந்தான்: "அம்மா, நாங்கள் இருவரும் வேலை டென்ஷனில் இருக்கிறோம். வீட்டையும் மானேஜ் செய்து களைத்துப் போகிறோம். புரிந்துகொள் அம்மா... தேவை இல்லாமல் கத்தாதே. உன் மருமகளும் தான் களைத்துப் போயிருக்கிறாள். எல்லாவற்றையும் மானேஜ் செய்வது என்பது சாதாரண காரியமா என்ன?"



"ஆமாம், ஆமாம், நான் இப்படிப்பட்ட வேலைக்கெல்லாம் போனதில்லை. படிப்பும் முழுமையாகப் படிக்கவில்லை. அரசாங்க வேலையும் எனக்கில்லை. ஆனால், வேலைக்காரர்களை மேய்ப்பது, கூட்டுக் குடும்பம். அம்மா வீடு, மாமியார் வீடு, உங்கள் படிப்பு எல்லாவற்றையும் நான் நிர்வாகம் செய்யவில்லையா என்ன?"

என் பேச்சைக் கேட்டமாதிரியே காட்டிக்கொள்ளாமல் சன்னி சொன்னான்:



"எதற்காக கூப்பிட்டாய், அம்மா?"

"பால்கனியில் சேரைப் போட்டு என்னை உடகார்த்தி வை. மனம் மகிழ்ச்சி அடையும். டாக்டர் சொல்லி இருக்கிறார், யாருடைய உதவியோடாவது உட்கார்ந்து கொள்ளலாம் என. நான் சொன்னேன் அல்லவா?"

இந்த மனிதர்களுக்குப் புரியாது. அறையில் தனியாக இருப்பது களைப்பைத் தருகிறது. இருபத்தி நான்கு மணி நேரத்தில் மூன்று அல்லது நான்கு வார்த்தைகள் பேசுவதனால் வாயெல்லாம் சூன்யம் ஆகிறது. மரண பயம் அதன் காலடி ஓசை வேறு.

அது ஒரு இனிய மாலைப் பொழுது. ஸ்டார் மார்ட்டிலிருந்து பழங்கள் வாங்கிக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருந்தேன். திடீரென் முதுகெலும்பில் ஒரு பயங்கரமான வலி. அதன் அலை ஓடிவந்தது. வலியினால் பயங்கரமான அலறல் ஓடி வந்தது தொண்டையிலிருந்து. நான் அருகிலிருந்த சுவற்றைப் பித்துக்கொண்டு நின்று கொண்டிருந்தேன்

உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. யாரும் என்னைக் கண்டு கொள்ளவில்லை. எதையும் உணராமல் எத்தனை சூன்யமாக நாம் இருக்கிறோம். நாம் வெளியில் கேட்கும் அலறல்களையே கேட்பதில்லை. அப்படி இருக்கும் போது உள்ளிருக்கும் அலறல்களை எப்படி கேட்கப்போகிறோம். அவை வெளியில் கேட்கவே கேட்காது.

பல டாக்டர்களின் பரிசோதனையிலிருந்து தெரியவந்தது, முதுகெலும்பில் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று.

இன்று இது ஸ்பைன் சர்ஜரிக்கான நாள். நான் கண்களைத் திறக்கிறேன். என் நினைவுகள் புரண்டு ஓடிவந்தன. கு-கு-கிக்-ஈ என்ற ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. நான் நடுங்கிப் போய்விட்டேன். என்ன மாதிரியான ஒலி இது? கார்டியாலஜி டிபார்ட்மெண்டில் இந்த கடுமையான ஓசையுடன் போராட வேண்டி வந்ததே. மிகவும் கோரமான முடிவு ஏற்பட்டது. அப்பா இறந்து போனார்.

நான் அப்செர்வேஷன் அறையில் இருந்தேன்.

கண்கள் முழுமையாகத் திறந்திருந்தன. கண் முன் நீல ஆடையில் ஒரு தெளிவில்லாத உருவம் நின்றுகொண்டிருந்தது.

மறுபடியும் கண் திறந்தபோது, தலைமாட்டில் அண்ணன் நின்று கொண்டிருந்தார். அவர் ஈரமான கண்களோடு என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். உடல் என்னவோ அண்ணனுடையதாக இருந்தது. ஆனால், முகம் அப்பாவினுடையதாக முளைத்துவிட்டிருந்தது. அப்பாவின் முகம் மறைந்து போனது. அங்கு அம்மாவின் முகம் வந்து ஒட்டியிருந்தது. எப்போதும் போல அம்மா கண்களில் கண்ணீர் வழிய ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தாள். தைரியமான மகளே, அம்மாவும் அப்பாவும் எங்கே இருந்தாலும் சரி துன்பத்தின்போது வந்துவிடுவார்கள், என.

அப்பாவும் அம்மாவும் சென்றுவிட்ட போது தலைமாட்டில் நின்று கொண்டிருந்தார், அண்ணன். அண்ணனைக் கட்டி அணைத்துக் கொள்ளவேண்டும் என மிகவும் ஆசையாக இருந்தது. ஆனால், வலிமை இல்லை உடலில். மறுபடியும் நினைவு தப்பியது. எத்தனை முகங்கள்... மங்கலாக அக்கம் பக்கம் நீந்திக்கொண்டிருந்தன. அது நினைவிற்கு வந்தது.

எங்கே இருக்கிறாய் நீ? எனக்கு முற்றிலுமாக நினைவு திரும்பிவிட்டது.

“ஆமாம், எங்கே இருக்கிறாய் நீ?” அவர் நினைவுறுத்தினார் எனக்கு. அவன் இல்லை அது. அவனுடைய இரு கண்கள் என் முன்பாக நீந்தின. சிவப்பு நிறப் பூக்களைப் போல. என் துயரங்களால் அவனுடைய கண்கள் ஈரமாயின. சிவந்து போயின.

கண்களால் கேட்டான், மிகவும் வலிக்கிறதா என. நான் அச்சத்துடன் சிரித்தேன். வலியும் வெட்கம் கொண்டிருக்கும். நான் அவனுக்கு ஆம் என பதில் சொன்னேன். என் கண்களை அவன் எப்போதாவது சந்திப்பான். அல்லது விரல்களின் வருடலில், அல்லது நட்புடன் கூடிய சிரிப்போடு.

அவன் சென்றுவிட்ட போது எங்களுடையது அனைத்தையும் தன்னுடன் எடுத்துச் சென்றுவிட்டான். ஒரு வெப்பம் நிறைந்த பாதுகாப்பு கவசம், முகத்தில் புன்னகையை, அவன் கொடுத்துச் சென்றான். ஒரு இலையுதிர்காலத்து வெறுமையை. சூன்யத்தை. அவன் இப்போது மறுபடியும் வரவே போவதில்லை. வரவும்முடியாது.

நான் அவன் நினைவு என்னும் கடலில் மூழ்கி இருந்தேன். வலியின் ஒரு பெரு வெள்ளம் என் இடுப்பிலிருந்து கால்வரை முழ்கடித்தது. வலியிலிருந்து குரல் கூட எழும்பவில்லை. எனக்குத் தெரியும் எத்தனை அபாயகரமான ஆபரேஷன் நடந்து முடிந்திருக்கிறது எனபது. ஆண்டவனின் அருள் இல்லையெனில் நான் எழுந்து நடக்கவே முடியாமல் போயிருக்கலாம். ஒவ்வொரு உறுப்பும் தன் வேலையைச் செய்வதை நிறுத்திவிட்டது. எல்லா வலியும் கண்கள் வழியே ஓடத்தொடங்கின. எனக்கு முழுமையாக நினைவு திரும்புவதற்காக நான் அப்சர்வேஷனில் இருக்கிறேன். நினைவு திரும்பிவிட்டது. நான் வலது புறமாக கழுத்தைத் திருப்பினேன். கண்களை கொஞ்சம் உயர்த்திப் பார்த்தேன். உயர்த்த முடிந்தது. அப்பாடா! மூவ்மெண்ட் இருக்கிறது. இத்தனை வலிக்கும் இடையிலும் கூட எனக்கு ஒரு ஆறுதல் கிடைத்தது. என்னால் நடக்க முடியும். சன்னி வந்துவிட்டிருந்தான்... அவனைக் கட்டியணைக்க மனம் விரும்பியது. ஆனால்...

ஆஸ்பிடலிலிருந்து வீட்டிற்கு என் அறைக்கு வந்துவிட்டேன். குழந்தைகள் என்னைப் பிடித்துக்கொண்டு பாத்ரூமில் உட்கார்த்தி வைக்கின்றனர். உடல் வலியால் நடுங்கத் தொடங்குகிறது. முன்னைப் போல இனி எப்போதாவது என்னால் நடக்க முடியுமா? யோசித்தேன் நான். ஊனமுற்றவளாக ஒவ்வொரு விஷயத்திற்கும் மற்றவர்களை அண்டி இருப்பவளாக...

என் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது. எப்படி நடக்க முடியும் என்னால்?

டாக்டர் சொன்னார்: “ஆரம்பத்தில் பயமாக இருக்கும். ஆனால், முயற்சி செய்யுங்கள். அப்போது நடக்க முடியும். இல்லாவிட்டால் அப்படியே முடங்கிப் போய்விடுவீர்கள்.”

முடங்கிப் போய்விடுவேன், முடங்கிப் போய்விடுவேன்... காதுகளில் ஒலித்தது.

வாக்கருடன் முதல் காலடியைத் தரையில் எடுத்து வைத்த போது என்னால் எப்படி நடக்க முடியும் என எனக்குத் தோன்றியது. அத்தனை கஷ்டம். ஊனமுற்றவள் போல வாழ்க்கை இருக்கும் என்று தோன்றியது. ஒரு பறவையைப் போல பறந்து திரிந்து கொண்டிருந்த நான்... இப்போது வாக்கரின் உதவியோடு... ஆமாம், ஆமாம், உனது

இந்தத் தோற்றதையும் பார் என உலகம் என்னிடம் சொன்னது.

என் உடல் நலம் விசாரிக்க சிலர் வந்தனர். டிராயிங்க் ரூமில் அமர்ந்து டீக்குடித்துக்கொண்டு இருந்தார்கள். (குரல்கள் கேட்டன)

"அட, எல்லாவற்றையும் இப்போது மறந்துவிடு. மேஜர் ஆப்பரேஷன். எழுந்து நின்றாலே போதும். வாக்கர் இல்லாமல் நடப்பது என்பதையெல்லாம் விட்டுவிடு, சன்னி."

"நான் மிகவும் களைத்து போய்விட்டேன்... வேலை... வீடு... பிறகு இந்த நோய்ச் சேவை. என்னால் முடியவே இல்லை. இவருடைய பெண் நான்கு நாட்கள் வந்து சேவை செய்துவிட்டு போய்விட்டாள். " இது மருமகளின் குரல். "எல்லாவற்றையும் சன்னி செய்ய வேண்டி இருக்கிறது. மேலும் இவர்..."

"இல்லை நான் தைரியம் இழக்க மாட்டேன். அம்மாவிற்கு நடக்கக் கற்றுக் கொடுப்பேன். நான் தைரியத்தை இழக்க மாட்டேன்." சன்னியின் குரல் ஆசையுடன் இருந்தது.

நீண்ட நட்களாக தனிமையில் இருந்து இருந்து போரடித்தது. நீல வானத்தைப் பார்க்க மனம் விரும்பியது. பால்கனியில் பூத்திருக்கும் சில மலர்கள், புக்கு சிக்குவையும் பார்க்க வேண்டும். அவை என்னைப் பார்க்காமல் வருத்தத்தில் இருக்கும். என் பால்கனியின் இடதுபுறத்தில் உட்கார்ந்து கொண்டு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும். நான் பால்கனியில் சோளமோ வேறு தானியமோ போடுவேன்... அவை பசியோடு இருக்கும்...

என் கண்களில் நீர் நிறைந்தது. ஒரு நாள் நான் பிடிவாதம் பிடித்து என்னை பால்கனியில் உட்காரவைக்கச் சொன்னேன். சிறிது நேரம் சுக்கும் புக்குவும் என் பக்கத்தில் வரட்டுமென.

குழந்தைகள் சிரித்துக்கொண்டே கேட்டனர்: "எல்லா புறாக்களும் ஒரே மாதிரியாகத்தானே இருக்கின்றன. எப்படி கண்டுபிடிக்க முடியும்?" சிறிது நேரத்திலேயே சுக்குவும் புக்குவும் என் அருகில் வந்துவிட்டன.

"மனிதர்களும் கூட எல்லோரும் ஒரே மாதியாகதான் இருக்கிறார்கள். பின் நாம் எப்படி வேறுபடுத்தி அடையாளம் காண்கிறோம்? புறாக்கள் எப்போதும் தனியாக வராது. இது உண்மை. இந்த ஜோடியை கவனமாகப் பார்த்தாய் எனில் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். இதில் ஆண் புறா எது? பெண் புறா எது என்று கண்டுபிடிக்க முடியும்."

தானியங்களைக் கொத்திக்கொண்டே இரண்டும் கைப்பிடி சுவற்றின் மேல் உட்கார்ந்துகொண்டு விட்டன. சுக்கு தன் அலகால் புக்குவைக் கோதிக் கொடுத்தது. காதல் புரிந்தது. ஈடுபாடு கொண்ட மனதோடு காதலன் காதலிக்கு முத்தம் கொடுப்பதைப் போல இருந்தது. அற்புதம். இந்தக் காட்சி ஆச்சரியப்படத்தக்கதாகவும் இருந்தது.

தினமும் இவர்கள் இந்தப் பாட்டைப் பாடுவார்கள், சுக்குவும் புக்குவும் அசிங்கம் செய்கின்றன என. "விசித்திரமாக இருக்கிறது. தன் உடம்பையே சமாளித்துக்கொள்ள முடியவில்லை. ஆசையை பார். வலை அடித்துவிடலாம்."

நான் நடுங்கிப் போய்விட்டேன். வலை போட்டுவிட்டால் அவை என் பக்கத்தில் எப்படி வரமுடியும்?

நான் யோசிக்கத் தொடங்கினேன்.

நானே பயிற்சி செய்ய வேண்டும். யாருக்கு நேரம் இருக்கிறது என்னை நடத்தி பயிற்றுவிக்க? யாரால் முடியும் இதெல்லாம்? மனதிற்குள்ளாகவே முடிவு செய்துகொண்டேன். அடுத்த நாள் வலையடிக்கப் பொருட்கள் வந்துவிட்டன. வேலை தொடங்கியாகிவிட்டது. என் சுக்குவும் புக்குவும் இனி என் அருகில் வரமுடியாது.

வீட்டில் அனைவரும் டி.வி. பார்த்துக்கொண்டு அதில் மூழ்கி இருந்தனர். ஏதோ ஒரு போரடிக்கும் சீரியல். அது ஓடிக்கொண்டு இருந்தது. நான் மெல்ல சப்தமில்லாமல் என்னுடைய வாக்கரை என் அருகில் இழுத்துக்கொண்டேன். என் இரு கால்களையும் தரையில் இருத்தினேன். கைகளின் வலிமையால் வாக்கரைப் பிடித்துக்கொண்டு நின்றுவிட்டேன். மெல்ல மெல்ல நடந்து நடந்து லிஃப்ட்டின் அருகில் வந்துவிட்டேன். லிஃப்ட்டிலிருந்து கீழே இறங்கினேன். எத்தனை அழகாக மனம் மயக்கும் விதம் இருந்தது. விளையாடும் குழந்தைகள், மரம், செடி கொடிகள், வண்ண வண்ண பூக்கள், மின்னும் வானம். பெஞ்சின் மீது உட்கார்ந்து கொண்டேன். குழந்தைகளின் குதூகலத்தைக் கண்டு நானும் சிரிக்கத் தொடங்கினேன். எனது எல்லா தனிமையும் அந்த சிரிப்பில் காணாமல் கரைந்து போனது. கண் முன்னால் ஒரு அம்மா தன் குழந்தைக்கு நடக்கக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தாள். தள்ளாடும் அந்த குழந்தை சிரிக்கிறது. பூங்கா முழுவதும் சிரிப்பினால் பூத்துக் குலுங்குகிறது.

எனக்கு என்னுடைய சுக்குவும் புக்குவும் நினைவுக்கு வந்தன. அருகிலேயே ஒரு ஜோடிப் புறாவைப் பார்த்ததும் நினைவிற்கு வந்தது. அடடா, இது சுக்குவும் புக்குவும் அல்லவா? இரண்டும் ஒரு கணத்தில் என் அருகில் வந்துவிட்டன. மிக அருகில். ஆண்டவனே உன் கருணையே கருணை. அற்புதம். நான் விரைவிலேயே வாக்கர் இல்லாமல் நடப்பேன். என்னுள் ஒரு நம்பிக்கை எழுந்தது.

கிருஷாங்கினி <nagarajan63@gmail.com>

# கவிதை அனுபவம்

## ம.பெ. சீனிவாசன்

தாம் படித்துச் சுவைத்த கவிதைகள் பற்றி மணிக்கணக்கில் விளக்கிப் பேசக் கூடியவர்கள் உண்டு. அத்தகையவர்களுள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவர் டி.கே.சி. அவ்வியல்பு காரணமாகவே அவர், ‘இரசிகமணி’ எனப் பெரும்பெயர் பெற்றார்.

> அரவம் கரந்ததோ? அச்சுமரம் இற்றுப்
> புரவி கயிறுருவிப் போச்சோ?

என்னும் தனிப்பாடலுக்கு மட்டும் அலகு அலகாக நிறுத்தி நிறுத்தி நீண்ட நேரம் அவர் நிகழ்த்திய உரை, ‘இந்தப் பாடல் என்ன தான் சொல்கிறது?’ என்று அறியத்துடிக்கும் ஆர்வத்தை (Suspense) அவையோரிடம் உண்டாக்கியதை - அவரின் தலையாய சீடர் வித்துவான் ல. சண்முகசுந்தரம் சொல்லக் கேட்டிருக்கிறேன். இப்படிக் காற்றில் கரைந்து - மறைந்து / மறந்து போய் விடுகிற பேச்சாக இல்லாமல் - கவிதையனுபவம் பற்றிப் பல நூறு பக்கங்களில் நூல் எழுதியவர்களும் உண்டு. பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ‘கவிதையனுபவம்’ என்னும் பெயர் கொண்ட நூல் இவ்வகையில் குறிப்பிடத்துக்கது. தமிழில் இன்று ஆராய்ச்சிக்கான வாய்ப்புகள் பெருகியுள்ள நிலையில் கவிதையனுபவம் பற்றிய நூல்வெளியீடுகளும் அதிகரித்துள்ளன.

முந்தைய தலைமுறையினர் கொண்டிருந்த கவிதையனுபவம் நம்மை வியப்பில் ஆழ்த்தும். உ.வே. சா. ஆசிரியரான மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சைவ நெறியை இறுகப் பற்றியவர். ‘வேங்கடராமன்’ என்னும் தம்மாணாக்கரின் பெயரைச் ‘சாமிநாதன்’ என்று மாற்றுமளவுக்குத் தீவிர சைவர் (என் சரித்திரம் ப.188). எனினும் சமய வேற்றுமை கருதாது கம்பனை விரும்பிக் கற்றவர்; அதில் ஆழங்கால்பட்டவர். பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் கொண்ட கம்பராமாயணத்தை மூன்று முறை படி எடுத்தவர். அச்சுநூல்கள் கிடைப்பதற்கு அரிதான அந்தக் காலத்தில், எழுத்தாணி கொண்டு கைவலிக்க ஏட்டில் எழுதியவர். இந்த அசுர சாதனைக்கான வலிமையை அவருக்குத் தந்தது கம்பரின் கவி இன்பமே!



தம்மாணாக்கர்களுக்குக் கம்பராமாயணப் பாடம் நடத்தும் போது அவர்கள் வாசிக்கும் எல்லாப் பாடல்களுக்கும் அவர் பொருள் சொல்வதில்லை. சிலவற்றுக்குப் பொருள் சொல்லாமல், ‘உருத்திர சன்மனைப்போல்’, உருகிமனங்கரைந்து மெய்சிலிர்த்து வாளா இருப்பாராம். இது பற்றி அவரின் மாணாக்கரான உ.வே.சா. இப்படி எழுதுகிறார்:

> சில பாடல்களை மீண்டும் மீண்டும் பலமுறை படிக்கச் சொல்வார். அவற்றை விளக்கிச் சொல்லி இன்ன இன்ன நயங்கள் உள்ளனவென்று எடுத்துக் காட்டுவதை விடப் பலமுறை படிக்கச் செய்து கேட்டு அனுபவிப்பதில் அதிக இன்பம் அவருக்கு இருந்தது. சில பாடல்களுக்கு அவர் வார்த்தைகளால் பொருள் சொல்லவில்லை. கண்ணீர் விட்டு உருகி நின்ற அவர் மெய்ப்பாடுகள் உரை கூறின. “இனிமேல் இப்படி யார் பிறக்கப் போகிறார்கள்? என்ன அழகு! என்ன அழகு! யோசித்துப் பாடிய பாட்டுகளா இவை? இயற்கையாக வருகிற வாக்கின் நயந்தான் எப்படி இருக்கிறது!” என்பார். “கம்பர் பாடலை நாமும் உணர்ந்து இன்புறுகிறோம்; அவரும் உணர்ந்து அனுபவித்தார். ஆனால், கவிஞராகிய அவர் பெற்ற அனுபவம் நமக்கு இருக்குமோ என்பது சந்தேகந்தான். கவிஞன் உள்ளத்தைக் கவிஞன் உணரும் முறையே வேறு போலும். (என்சரித்திரம், ப.384).

உ.வே.சா.வின் சமகாலத்தவரான மயிலை சண்முகம் பிள்ளையின் (1880-1941) ‘கம்பன் கவிதையனுபவ’மும் இத்தகையதே. இவரும் பலமாணாக்கர்க்குக் கல்வி பயிற்றியவர். மணிமேகலைக் காப்பியத்தை முதன் முதலில் அச்சிட்டவர். ‘கம்பராமாயணம் அயோத்தியா காண்டத்தைப் படிக்கும் போதெல்லாம் உள்ளம் உருகிக் கண்ணீர் வடிப்பாராம்.’ அரிய தகவல்களைத் தேடித் தேடித்திரட்டித்தரும் இயல்புடைய கவிஞர் சுரதா - தம்முடைய பெயர் தாங்கி வெளிவந்த கவிதை இதழில் (‘சுரதா’ 01-09-1968) இவரைப் பற்றிப் பதிவு செய்துள்ள





டிகேசி, மீனாட்சி சுந்தரம்பிள்ளை, உவேசா

குறிப்பு இது.

இவ்விருவரின் காலத்துக்கு முந்தியவராய்க் கி.பி. பதினொராம் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவப் பெரியார் ஒருவரின் வாழ்க்கை நிகழ்ச்சியும் இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. அவர் பெயர் ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர். ஸ்ரீ இராமாநுசரின் (கி.பி.1017 - 1137) ஐம்பெரும் ஆசிரியர்களுள் ஒருவர் இவர்.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி,
வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாம்
தெழிகுரல் அருவித் திருவேங் கடத்து
எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே! *(3-3-1)*

என்னும் திருவாய்மொழிப் பாசுரத்தில், 'இனி மேலுள்ள காலமெல்லாம் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே எல்லா அடிமைகளும் செய்ய வேண்டும்' என்னும் பாரிப்பை வெளியிடுகிறார் நம்மாழ்வார்.

ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர் இத்திருவாய்மொழி பாடத் தொடங்கினால், 'ஒழிவில் காலமெல்லாம், காலமெல்லாம், காலமெல்லாம்' என்று தொடங்கிக் கண்ணும் கண்ணீருமாய் நெடும் போது விண்ணப்பம் செய்து மேலே பாடமாட்டாமல் அவ்வளவிலேயே முடித்து விடுவாராம். ஈட்டுரை காட்டும் குறிப்பு இது. இதனை வைணவ உரை மரபில், 'ஐதிகம்' என்பர். இச்செய்தியை மேலும் உறுதிப்படுத்துவது போலத் திருப்பாவை நாலாயிரப்படி (பா.1) வியாக்கியானத்திலும் இது இடம் பெற்றுள்ளது.

இந்தக் காலத்திலும் கூட இத்தகைய கவிதையனுபவம் உடையவர்கள் இருக்கிறார்களா? இருக்கவே செய்கிறார்கள். 'சில கவிதைகளுக்கு விளக்கம் சொல்லவோ உரையெழுதவோ வேண்டாம்; இருந்தபடி அனுபவித்தாலே போதும்' என்பது அவர்கள் கருத்து

காட்டாக, 'தந்தை காலில் பெருவிலங்கு' எனத் தொடங்கும் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழிப் பதிகத்தில் உள்ள - 6, 7, 8 ஆகிய மூன்று பாசுரங்கள் குறித்துக் கருணாகராசார்ய ஸ்வாமி கருத்து வருமாறு:

> அருள் மாரியின் மென்மையான இத்தமிழ்ப் பாசுரங்களுக்கு உரையெழுதப் புகுந்தால் அப்பாசுரங்கள் கன்றிப் போய்விடுமோ என்ற அச்சமும் அடியேனுக்கு இருக்கிறது. ('கீதாசார்யன்' இதழ், ஆகஸ்ட், 2019, பக்.12-13)

வாசகர் பார்வைக்குப் பருக்கைப் பதமாக ஒரு பாசுரம் மட்டும் கீழே தரப்படுகிறது:

வஞ்சி மருங்குல் இடை நோவ
  மணந்து நின்ற கனவகத்து, என்
நெஞ்சு நிறையக் கைகூப்பி
  நின்றார் நின்ற ஊர்போலும்
பஞ்சி யன்ன மெல்லடிநற்
  பாவை மார்கள் ஆடகத்தின்
அஞ்சி லம்பின் ஆர்ப்போவா,
  அணியார் வீதி அழுந்தூரே!(758)

இதே முறையில் இப்பதிகம் முழுதும் 'மெல்லென' இன்னோசைமிகுந்து இயலக் காணலாம். எனவே, 'இவற்றைப் பாடியும் - படித்துமே அனுபவிக்க வேண்டும்; உரை சொன்னால் கன்றி விடுமோ' என்னும் அவரது அச்சத்தை நோக்கும் போது,

மலரினும் மெல்லிது காமம்; சிலரதன்
செவ்வி தலைப்படு வார் (1289)

என்று திருவள்ளுவர் சொன்னது காதல் அனுபவத்துக்கு மட்டுமல்ல; கவிதையனுபவத்துக்கும் தான் - என்றே நினைக்கத் தோன்றுகிறது. ●

# மகத்தான ரசிகர்

## பாவண்ணன்

“சிவராத்திரி முடிஞ்ச பிறகு குளிர்காலம் சிவசிவான்னு மறைஞ்சி போயிடும்” என்று பெங்களூரில் பொதுவாகப் பேசிக்கொள்வார்கள். நான் முதலில் அதை ஏதோ காலம்காலமாக புழக்கத்தில் இருக்கும் ஒரு நம்பிக்கை என்றுதான் நினைத்தேன். ஆனால், அதில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் ஆணித்தரமான உண்மை என்பதை பெங்களூருக்கு வந்த ஒருசில ஆண்டுகளிலேயே புரிந்துகொண்டேன்.

எல்லாமே சொல்லிவைத்தது மாதிரி நடக்கும். சிவராத்திரிக்கு முதல் நாள் வரை மாலை ஆறு மணிக்கெல்லாம் அஸ்தமனமாகிக் கொண்டிருந்த சூரியன், சிவராத்திரிக்கு அடுத்த நாள் ஆற அமர ஆறரை வரைக்கும் அடிவானத்திலேயே வட்டமிட்டுக் கொண்டிருக்கும். காற்றில் அதுவரை கலந்துவந்த ஈரப்பதம் திடீரென இல்லாமலாகிவிடும். இலைகள் உதிரத் தொடங்கும். வீட்டிலிருக்கும் குளிராடைகள், கம்பளிகள், போர்வைகள் எல்லாவற்றையும் துவைத்து காயவைத்து மூட்டைகட்டி பரணில் ஏற்றிவிடுவார்கள். மருந்துக்குக்கூட குளிர் இருக்காது. வெப்பம், வெப்பம், வெப்பம். எங்கெங்கும் அதுவே நீக்கமற நிறைந்திருக்கும். ஒரே நாளில் இயற்கையின் கோலம் மாறிவிடும்.

சிவராத்திரி அன்று இரவு தேர் இழுக்கத் தொடங்கும் நேரத்துக்குச் சரியாக அரைமணி நேரம் மழை பொழியும். வழக்கமாக சிறு தூறலுக்கே ஓடி ஒளிகிறவர்கள் அன்று ஆனந்தமாக மழையில் நனைந்தபடி தேரை இழுப்பார்கள். அது முதல் மழை. அந்த மழைக்கு அனைவரும் சேர்ந்து அளிக்கும் மரியாதை அது. அதற்குப் பிறகு இரண்டு நாளுக்கு ஒருமுறை அல்லது மூன்று நாளுக்கு ஒருமுறை என அடுத்தடுத்து அரைமணி நேரம் அந்த மழை தொடர்ந்து பொழியும். அதுவரை நீடித்திருந்த வெப்பத்தை அந்த மழை தணித்துவிடும். தூங்கிவிடலாம். பிரச்சினை இருக்காது. அந்தமழைஅப்படியேதொடர்ந்துயுகாதி வரைக்கும் பொழியும். கோடைக்காலம் வந்ததும் தெரியாமல் போவதும் தெரியாமல் போய் முடிந்துவிடும்.

அது ஒரு காலம். இன்று அப்படி இல்லை என்பதுதான் வருத்தத்துக்குரிய செய்தி. அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த சிவராத்திரி மழை இந்த முறையும் பொய்த்துவிட்டது. அடுத்தடுத்து ஒவ்வொருநாளும் வெப்பம் பெருகிக்கொண்டே சென்றது. பகல் வெப்பத்தைவிட இரவு வெப்பம்தான் மிகவும் கொடுமையானது.

கட்டிலில் படுப்பதை நிறுத்திவிட்டு முதலில் தரையில் படுக்கையை விரித்து படுக்கத் தொடங்கினேன். இரண்டுமூன்று நாட்களுக்குத்தான் அந்த ஏற்பாடு உதவியாக இருந்தது. பிறகு அதுவும் வெப்பமாக இருந்ததால், படுக்கையைச் சுருட்டி வைத்துவிட்டு பாய் மீது போர்வையை மட்டும் விரித்து படுக்கத் தொடங்கினேன். இரண்டே நாளில் அதையும் வெப்பமென உடல் உணர்ந்தது. பிறகு போர்வையைச் சுருட்டி வைத்துவிட்டு வெறும் பாயில் படுத்தேன். அதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. எல்லாம் நன்றாகத்தான் போய்க் கொண்டிருந்தது. பாயே இல்லாமல் வெறும் தரையில் படுப்போம் என ஒருநாள் ஏதோ கிறுக்குத்தனமாக ஓர் எண்ணம் நெஞ்சில் உதித்தது. அன்று இரவு தரையில் படுத்து உறங்கினேன்.

காலையில் எழுந்தபோது வழக்கமான உற்சாகமில்லை. களைப்பாக இருந்தது. பல் தேய்த்துவிட்டு சூடாக ஒரு தேநீர் அருந்தினால் சரியாகிவிடும் என்று நினைத்துக்கொண்டேன். ஆனால், தேநீருக்குப் பிறகும் நிலைமை மாறவில்லை.

வாசலில் செய்தித்தாள் கொடுப்பவர் மணியடிக்கும் சத்தம் கேட்டது. எழுந்துபோய் கதவைத் திறந்தேன். வழக்கமாக இருவரும் குட்மார்னிங் சொல்லிக்கொள்வோம். அன்றும் சொன்னேன். ஆனால், என் குரல் எனக்கே கேட்கவில்லை. பலமுறை செருமி சரிப்படுத்திக்கொள்ள முயற்சி செய்தபோதும் என்னால் முழுமையாக குட்மார்னிங் சொல்லமுடியவில்லை. “வீட்டுல மாத்திரை இருந்தா போடுங்க சார், இல்லைன்னா நிலவேம்பு கஷாயம் வச்சி குடிங்க. ரெண்டு வேளையில சரியாயிடும்” என்று சொல்லிவிட்டுச் சென்றார் செய்தித்தாள்காரர்.



என் மனைவி எழுந்து வந்ததும்



க.நா.சு.

விஷயத்தைச் சொன்னேன். நெற்றியில், கழுத்தில், முதுகில் எல்லாம் கைவைத்துப் பார்த்தார். “காய்ச்சல் இல்லை. தொண்டைதான் அடைச்சிகிச்சி. ஒருவேளை உள்சளியாவும் இருக்கலாம்” என்று பொதுவாகச் சொன்னார். பிறகு சிற்றுண்டிக்கு முன்னால் ஒருமுறை, சிற்றுண்டிக்குப் பிறகு ஒருமுறை என இருவேறு கஷாயங்கள் கொடுத்தார். அதற்கு ஒரு பலன் இருந்தது. அடுத்த ஒரு மணி நேரத்தில் கீச்சுகீச்சென்று குருவிக் குரலில் பேச முடிந்தது. ஆனால், பேசத் தொடங்கினால் கூடவே இருமலும் வந்தது.

அன்று மாலை நான் விட்டல்ராவைச் சந்திக்க வேண்டியிருந்தது. அவரிடமிருந்து பெற்று வந்த சில புத்தகங்களைத் திருப்பிக் கொடுக்கவேண்டியிருந்தது. சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும் என்பதால் புறப்பட்டுச் சென்றுவிட்டேன்.

“வணக்கம் சார். எப்படி இருக்கீங்க?” என்று கேட்டபோது வெளிப்பட்ட குரலை வைத்தே அவர் கண்டுபிடித்துவிட்டார். “என்னாச்சி தொண்டைக்கு? திடீர்னு ஏன் இப்படி ஆச்சு?” என்று கேட்டார். நான் நடந்ததையெல்லாம் சொன்னேன். அவருக்கு வருத்தமாக இருந்தது.

“ராத்திரி நேரத்துல புழுக்கம் தாங்கலைன்னா எனக்கும் அப்படித்தான் தோணும் பாவண்ணன். நான் மெதுவா கட்டிலை விட்டு இறங்கி வந்து இந்த ஈசிசேர்ல சாஞ்சிடுவேன். ஃபேன அஞ்சில வச்சி ஓடவிட்டுட்டு அப்படியே கண்ண மூடிக்குவேன். ஏதோ ஒரு நேரத்துல அப்படியே தூங்கிடுவேன். பருவ மழை தொடங்கற வரைக்கும் சமாளிச்சிட்டோம்னா, அதுக்கப்புறம் இந்த வருஷத்தை சுலபமா தாண்டிடலாம்.”

நான் எதையோ சொல்ல வாய் திறந்தேன். அதற்குள் இருமல் வந்துவிட்டது. “வேணாம் பாவண்ணன், வேணாம். நீங்க பேசாதீங்க. நான்

பேசறேன். நீங்க சும்மா கேளுங்க. அது போதும்" என்று தடுத்தார் விட்டல்ராவ். அவர் சொல் எனக்கு ஆறுதலாக இருந்தது. "சரிங்க சார்" என்று தலையசைத்தபடி கீச்சுக் குரலில் சொன்னேன்.

"இந்தக் கோலத்துல உங்கள பார்க்கும்போது, இதே மாதிரியான கோலத்துல பல வருஷங்களுக்கு முன்னால நான் சந்திச்ச ஒரு எழுத்தாளருடைய ஞாபகம் வருது. அவரைப் பத்தி சொல்றேன் கேளுங்க" என்று உற்சாகத்தோடு தொடங்கினார் விட்டல்ராவ்.

ஆவலைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல், "யார் சார் அவர்? அசோகமித்திரனா?" என்று வேகமாகக் கேட்டேன். கூடவே இருமல் வந்துவிடுவதுபோல தொண்டைக்கடியில் ஒரு கரகரப்பு எழுந்தது. எப்படியோ கமறியும் செருமியும் இருமலுக்கு வழிவிடாமல் தடுத்துவிட்டேன்.

"அசோகமித்திரன் இல்லை. க.நா.சு." என்று சொல்லிக்கொண்டே விட்டல்ராவ் இருக்கையிலிருந்து எழுந்துபோய் சமையலறைக்குள் சென்று ஒரு தம்ளர் வெந்நீர் கொண்டுவந்து கொடுத்தார். அதை வாங்கிப் பருகிய பிறகு தொண்டைக்கு சற்றே இதமாக இருந்தது. என் பையில் ஸ்டெரிப்ஸில்ஸ் இருந்தது. ஒன்றை எடுத்து நாக்கில் வைத்துக்கொண்டேன்.

"க.நா.சு.வா?" என்று ஆச்சரியம் ததும்ப அவரைப் பார்த்தேன்.

"டில்லிக்குப் போய் பல வருஷ காலம் இருந்துட்டு எண்பத்துநாலு எண்பத்தஞ்சி வாக்குல சென்னைக்குத் திரும்பி வந்து சில வருஷங்கள் தங்கியிருந்தாரு க.நா.சு.. 'தினமணி கதிர்', 'குங்குமம்'னு எல்லாப் பத்திரிகைகளுக்கும் அப்ப எழுதினாரு. 'பித்தப்பூ', 'கோதைசிரித்தாள்' கதையெல்லாம் அப்ப வந்ததுதான். 'குங்குமம்' ஆசிரியர் பாவை சந்திரன்தான் அவருக்கு மைலாப்பூர்ல வாடகைக்கு ஒரு வீடு பார்த்துக் கொடுத்தாரு. அப்ப நான் மைலாப்பூர் எக்சேஞ்ச்ல வேலை செஞ்சிட்டிருந்தேன். நேரம் இருக்கும்போது அவரைப் பார்த்து ரெண்டு மூனு மணி நேரம் பேசிட்டிருப்பேன். அப்படியே நடந்துபோய் ராயர் காப்பி கிளப்ல காப்பி சாப்பிடுவோம். அவரு பேசறத கேக்கறது ரொம்ப இனிமையான அனுபவம். படிச்சி தெரிஞ்சிகிட்ட பல விஷயங்களை நமக்குச் சொல்வாரு. ஒருநாள் அவரைப் பார்க்க போயிருந்தேன். வழக்கமா என்னைப் பார்த்ததுமே சிரிச்சிகிட்டே வாங்க வாங்கன்னு சொல்றவரு, வாங்கவாங்கன்னு சொல்ற மாதிரி தலையை மட்டும் ஆட்டினாரு. என்னடா இது வரவேற்பு புதுதினுசா இருக்குதேன்னு நெனச்சிகிட்டேன். எனக்கு ஒன்னும் புரியலை. அதிர்ச்சியோடு என்ன சார்,என்னாச்சின்னு கேட்டேன். அவர் உடனே விரலால வாயைத் தொட்டு பேச முடியலைன்னு சைகை செஞ்சார். என்னால அந்த சைகையைச் சரியாகப் புரிஞ்சிக்க தெரியலை. குழப்பத்தோடு அவரைப் பார்த்து என்ன சார் சொல்றீங்க, புரியலையேன்னு கேட்டேன்."

"ம்."

"அந்த நேரத்தில் கதவுக்கு மறுபுறத்தில உட்கார்ந்திருந்த க.நா.சு.வின் மனைவி, 'பேச முடியலையாம். தொண்டை கட்டிகிச்சி. அதை உங்களுக்கு விளக்கறதுக்காக சைகை செய்றாரு. சைகையைக்கூட ஒழுங்கா செய்யத் தெரியலை இவருக்கு'ன்னு கொஞ்சம் இடிக்கிறமாதிரி கிண்டலா குரல் கொடுத்தாங்க. அதுக்கப்புறம்தான் எனக்கும் புரிஞ்சது. க.நா.சு.வை பார்க்க பாவமா இருந்தது. இருபத்தி நாலு மணி நேரமும் ஓயாம பேசிட்டே இருந்த ஒரு மனுஷன் ஒரு வார்த்தை கூட பேசமுடியாதபடி உட்கார்ந்திருக்கிறத பார்க்கிறதுக்கு பரிதாபமா இருந்தது. ஐயையோ, ஏன் சார் இப்படி ஆச்சு? குளுமையா ஏதாச்சிம் சாப்பிட்டீங்களான்னு பொதுவா விசாரிச்சேன். அவரால ஒரு வார்த்தை கூட பதில் சொல்ல முடியலை. அவுங்க மனைவி அவரைப் பத்தி எடக்கு முடக்கா பேசறத ஆனந்தமா ரசிச்சி கேட்டுகிட்டே, அவுங்க முகத்தையே பார்த்துட்டிருந்தாரு. ம், நீ சொல்லுங்கறமாதிரி அவங்க பக்கமா திரும்பி தலையை அசைச்சாரு."

என்னால் அந்தக் காட்சியை உடனடியாக மனத்துக்குள் ஓர் ஓவியமாக எழுதிப் பார்க்க முடிந்தது. அந்த மாதிரியான சிக்கல்களில் சிக்கிய பல அனுபவங்கள் எனக்கும் உண்டு என்பதால், க.நா.சு சார்ந்த அனுபவத்தைக் கேட்க ஆவலோடு இருந்தேன்.

"இது குளுமை, இது வெப்பம்னு எதயாச்சிம் விட்டுவைக்கிற மனுஷனா இவரு? என்ன நாக்கோ அது? ஆதிசேஷன் மாதிரி ஆயிரம் நாக்கு. எல்லாத்தயும் கொண்டா கொண்டான்னு உள்ள இழுத்துக்கும்'னு அந்த அம்மா ஆரம்பிச்சாங்க. தன்னைப் பத்திதான் சொல்றாங்கன்னு தெரிஞ்சாலும் அத ரொம்ப சந்தோஷமா, ஏதோ கதை கேட்கிற குழந்தை மாதிரி முகத்தை வச்சிகிட்டு அவுங்களயே பார்த்தாரு க.நா.சு."

"ம்."

"நாரத்தங்காய் தெரியுமில்லையா உங்களுக்கு'ன்னு மாமி என்னைப் பார்த்துகேட்டாங்க. நல்லா தெரியுமே மாமின்னு சொன்னேன். ரெண்டு நாள் முன்னால இவரைப் பார்க்கிறதுக்காக வெளியூருலேர்ந்து ரெண்டு பேரு வந்தாங்க. ஒரு பை நிறைய நாரத்தங்காய் கொண்டுவந்து கொடுத்துட்டு போனாங்க. அவுங்க அந்தப் பக்கம் போனதுமே இவரு அந்தப் பையில இருந்த நாரத்தங்காய்கள ஒரு முறத்துல கொட்டினார். ஒவ்வொன்னும் நல்லா ஆரஞ்சுப்பழம் சைஸ்ல பெரிசா இருந்தது. நாரத்தங்காய் கூடவே சரிபாதி கொழிஞ்சிக்காயும் கலந்திருந்தது. யாரோ கடைக்காரன் அவுங்கள நல்லா ஏமாத்திட்டிருக்கான்.



மகள் திருமணத்தில் மனைவியுடன் கநாசு

ரெண்டுக்கும் வித்தியாசம் தெரியாம அவுங்களும் வாங்கியாந்திட்டாங்க. இருக்கறதுலயே பெரிய காயா பார்த்து நாரத்தங்காய்ல ரெண்டு, கொழிஞ்சிக்காய்ல ரெண்டு தனியா எடுத்தாரு. எதுக்குன்னு கேட்டேன். ஜூஸ் போடப்போறேன். உனக்கும் வேணுமான்னு கேட்டாரு. இந்த நேரத்துல எதுக்கு ஜூஸ், அப்படியே வைங்க, ஊறுகாய்க்கு ஆகும்னு சொல்லச்சொல்ல, சின்னப்புள்ளை மாதிரி இருக்கட்டும் இருக்கட்டும்னு சொன்னபடியே நாலையும் வெட்டி துண்டாக்கி ஒரு தம்ளர் நிறைய ஜூஸ் போட்டுட்டாரு. ஒரு விரலால தொட்டு நாக்குல வச்சிப் பார்த்தாரு. நல்ல புளிப்பா இருந்ததுபோல. நாலஞ்சி கரண்டி சர்க்கரையை அள்ளி போட்டு கலக்கி ஒரு சொட்டு கூட மிச்சம் வைக்காம குடிச்சி முடிச்சிட்டாரு. அதுக்கப்புறம்தான் அவர் முகம் மலர்ந்ததுன்னு சொல்லி நிறுத்தினாங்க. நான் திரும்பி க.நா.சு. முகத்தைப் பார்த்தேன். தனக்கும் அந்தக் கதைக்கும் சம்பந்தமே இல்லைங்கற மாதிரி மாமிய பெருமையா பார்த்திட்டிருந்தாரு அவரு."

"தொண்டை கட்டிகிட்டதுக்கு அதுதான் காரணமா?" பொறுமையாக ஒவ்வொரு சொல்லாகக் கோர்த்து நான் அந்தக் கேள்வியை முன்வைத்தேன்.

"இதே கேள்வியைத்தான் நானும் மாமிகிட்ட கேட்டேன். இப்பதான் கதையே ஆரம்பிக்குது, இன்னும் மிச்சமிருக்கறது கதையையும் கேளுங்கன்னு மாமி அந்தக் கதையை அன்னைக்கு ஒரு புராணம் மாதிரி சொன்னாங்க. அதை என்னால மறக்கவே முடியாது."

"என்னதான் நடந்தது?"

"ஆசைக்கு நாலு காயை எடுத்து ஜூஸ் போட்டு குடிச்சதோடு க.நா.சு. விட்டிருந்தா பரவாயில்லை பாவண்ணன். ஒரு ரெண்டு மணி நேரம் கழிச்சி மறுபடியும் நாலு காயை எடுத்து இன்னொரு தரம் ஜூஸ் போட்டு குடிச்சிருக்காரு. அந்த கிறக்கத்துல அப்படியே கொஞ்ச நேரம் கண்ண மூடி தூங்கிட்டாரு. நாலு மணிக்கு எழுந்ததுமே வீட்டுலயே ஒரு காப்பி குடிச்சிருக்காரு. அப்புறம் கொஞ்ச நேரம் ஏதோ படிச்சாராம். அந்த நேரம் யாரோ ஒரு சிநேகிதக்காரங்க வந்திருக்காரு. வாய்யா வெளியே போகலாம்னு அவர அழச்சிட்டு ராயர் காப்பி கிளப்க்கு போயி காப்பி சாப்பட்டிருக்காரு. அப்புறம் கொஞ்ச தூரம் நடை. பேச்சு. திரும்பி வந்து மறுபடியும் ஒரு காப்பி. வீட்டுப் பக்கமா நடந்து வரும்போது தெருவோரத்துல கோன் ஐஸ் விக்கறவன் ஒருத்தன பார்த்திருக்காரு. அவன் வண்டிக்குப் பக்கத்துல நின்னு ஒரு கோன் ஐஸ் வாங்கி சாப்பட்டாராம். அவரு எதிர்பார்த்த மாதிரியே நல்லா ஜில்லுனு இருக்கவே, இன்னொரு ஐஸ்கிரீம் குடுப்பான்னு வாங்கி, அதயும் சாப்பட்டாராம். இப்படி ஒரு வகைதொகை இல்லாம சாப்பட்டா என்னாகும் சொல்லுங்க, வீட்டுக்குத் திரும்பி வந்த ரெண்டு மணி நேரத்துக்குள்ள தொண்டை கட்டிகிச்சி. அந்தக் கதையை கோவில் கதாகாலட்சேபம் மாதிரி நல்லா

இழுத்து இழுத்து மாமி வக்கணையா சொன்ன விதம் அப்படியே ஒரு டாக்குமென்ட்ரி படம் மாதிரி என் கண் முன்னால இருக்குது."

கேட்கக்கேட்க எனக்கு வாய்விட்டு சிரிக்க வேண்டும் போல இருந்தது. அதே சமயத்தில் கட்டுப்பாடில்லாத சிரிப்பு எங்கே இருமலில் கொண்டுபோய் விட்டுவிடுமோ என நினைத்து அச்சமாகவும் இருந்தது. வாய்க்குள்ளேயே சிரித்துக்கொண்டேன். தொடர்ந்து கேட்பதற்காக "ம், அப்புறம்?" என்றேன்.

"எல்லாத்தயும் சொல்லிட்டு கடைசியா அந்த மாமி புத்தியே இல்லைங்க இவருக்குன்னு அவர் பக்கமா கையைக் காட்டி சொன்னாங்க. ஏதோ கோபத்துல சொல்றமாதிரி கொஞ்சம் அழுத்தம் கொடுத்து சொன்னாங்களே தவிர, ரொம்ப செல்லமாதான் சொன்னாங்க. அதைக் கேக்கறபோது எனக்குத்தான் அதிர்ச்சியா இருந்தது. ஆனா அந்த வார்த்தைய க.நா.சு. ஏதோ ஒரு நேஷனல்,இன்டர்நேஷனல் அவார்ட யாரோ தனக்கு அறிவிக்கிறதை கேக்கறமாதிரி சந்தோஷமா லயிச்சி கேட்டுகிட்டிருந்தாரு. க.நா.சு.வைப் பார்த்து அப்படி ஒரு வார்த்தையை தைரியமா பேச இந்த உலகத்துல மாமியால மட்டும்தான் முடியும்."

"புடிச்சதயெல்லாம் தேடித் தேடி படிக்கிற மாதிரி, புடிச்சத தேடித்தேடி சாப்புடறதுகூட ஒரு ரசனைதான் சார். என் கூட ஜே.இ.யா இருந்த ஒருத்தர் தினமும் காலையில டிபன் சாப்புட நாலு கடைக்கு போவாரு. முதல்ல ஒரு கடைக்குப் போய் ரெண்டு இட்லி சாப்புடுவாரு. அதுக்கப்புறம் இன்னொரு கடைக்கு போய் ஒரு தோசை சாப்புடுவாரு. மறுபடியும் இன்னொரு கடைக்கு போய் ஒரே ஒரு வடைமட்டும் வாங்கி சாப்புடுவாரு. கடைசியா ஒரு கடைக்குப் போய் ஒரு காப்பி சாப்புடுவாரு. ஒரே ஒரு நாள் நான் அவருகூட கம்பெனிக்கு போனேன். அடுத்தநாளே இது நமக்கு சரிவராதுன்னு ஒதுங்கிட்டேன். ஆனா அவரு தன்னை மாத்திக்கவே இல்லை. அவரு நெனச்சமாதிரியேதான் சாப்ட்டாரு."

"நீங்க சொல்றது உண்மைதான் பாவண்ணன். க.நா.சு. அப்படிப்பட்ட ஆள்தான். எந்தக் கடையில எது நல்லா இருக்கும்ன்னு ஒரு பெரிய சர்வே எடுத்து வச்சிருப்பாரு. அப்படியே தேடித் தேடிப் போய் சாப்புடுவாரு. அப்படி ஒரு ரசனை அவருக்கு சின்ன வயசிலயே வந்திட்டுது."0

"அந்த ரசனை கூட ஒரு வரம்தான் சார்."

"ஆமாம். அதுல சந்தேகமே இல்லை. அவருக்கு இந்த உலகத்துல எழுத்தத் தவிர வேறு எந்த கவனமும் கிடையாது. எழுத்தாளனாவணும்ங்கற எண்ணத்தோடு ஒரு டைப்ரைட்டர தூக்கிகிட்டு சென்னைக்கு வந்து சேர்ந்தவர் அவரு. ஒரு பெரிய ஆங்கில எழுத்தாளரா ஆகணும்ங்கறதுதான் இளமையில அவருடைய கனவா இருந்திருக்குது. ஆங்கிலத்துல நல்ல தேர்ச்சி இருந்தது. எழுதவும் முடிஞ்சது. இருந்தாலும், அவர் நெனைச்ச அளவுக்கு பெரிய எழுத்தாளரா ஆகமுடியலை. ஆனா, எந்தத் திட்டமிடலும் இல்லாமலேயே தமிழ்ல பெரிய எழுத்தாளரா வளர்ந்துட்டாரு. அது ஒரு தற்செயல். ஒரு தரம் அவருடைய கதை ஒன்னு நியூயார்க்கர் டைம்ஸோ என்னமோ, ஒரு வெளிநாட்டு பத்திரிகையில வெளிவந்தது. அவுங்க அவருக்கு சன்மானமா எழுபது டாலர் அனுப்பினாங்களாம்."

"எழுபது டாலரா?"

"ஆமாம். அந்த காலத்துல அது ஒரு பெரிய தொகை. ஆனா, க.நா.சு. அந்தப் பணத்தை வாங்கி என்ன செஞ்சாரு தெரியுமா? தெனமும் ரெண்டு வேளை மசால் தோசை, காப்பி சாப்ட்டே செலவு செஞ்சிருக்காரு"

"குடும்பத்துக்கு ஒன்னும் செய்யலையா?"

"குடும்பத்துக்கா? இந்தக் கதையை எனக்கு சொன்னதே மாமிதான். டாலரை ரூபாயா மாத்திட்டு வந்ததும் ஒரு அஞ்சி ரூபாயை எடுத்து மாமிகிட்ட கொடுத்து இப்ப இதை வச்சிக்கோ, நான் கேக்கற சமயத்துல கொடுன்னு சொல்லி கொடுத்தாராம். மிச்சத்தையெல்லாம் மாசம் முழுக்க மசால் தோசை வாங்கி சாப்ட்டே கரைச்சிட்டாராம்."

ஒரு கணம் அதைக் கேட்டு உறைந்துவிட்டேன். அடுத்த கணமே புன்னகை வந்துவிட்டது. உலகமே பணத்தை மதித்து, பணத்தை தெய்வமாக மதித்துக் கொண்டாடிக் கொண்டிருந்த நேரத்தில் ஒரு தோசை வாங்கும் அளவுக்குத்தான் உனக்கு மதிப்பு என்று அவர் மனம் பணத்தைப் பார்த்து காலமெல்லாம் சொல்லாமல் சொல்லிக்கொண்டே இருந்ததுபோலத் தோன்றியது. உடனே அதை விட்டல்ராவிடம் தெரிவித்தேன். அவரும் அதைக் கேட்டு, "அப்படியும் இருக்கலாம். அப்படி நினைக்கக்கூடிய மனிதர்தான் அவர்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார்.

க.நா.சு.வை நான் நேரில் பார்த்ததில்லை. ஆனால், சுந்தர ராமசாமி முதல் பாரதி மணி வரை பல ஆளுமைகள் வழியாக அவரைப் பற்றிய தகவல்களைக் கேட்டுக்கேட்டு ஒரு சித்திரத்தை என் நெஞ்சில் உருவாக்கி வைத்திருக்கிறேன். விட்டல்ராவ் வழியாக அறிந்துகொண்ட தகவல் அச்சித்திரத்தை மேலும் ஒளிகொள்ள வைத்தது.

"பெரிய ரசிகர்தான் சார் அவர்" என்று கீச்சுக்குரலில் சொன்னேன். அதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. "உண்மைதான் பாவண்ணன். அதுல சந்தேகமே இல்லை" என்றார் விட்டல்ராவ்.

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

# மு. முபாரக் கவிதைகள்



1

பசியோடு
அழுதுகொண்டிருக்கிறது
பெயர் தெரியா குழந்தை,
குடித்துவிட்டு மனைவியை
அடித்துக்கொண்டிருக்கிறான்
குடிகாரனொருவன்,
வீட்டுப்பாடம்
எழுதிவிட்டேனென அம்மாவிடம் பாராட்டு
வாங்கிக் கொண்டிருக்கிறாள் ஒரு சிறுமி,
உணவு கேட்டு வாசலில்
நின்றுகொண்டிருக்கும் முதிர்ந்த யாசகிக்கு
உணவோடு குளிருக்கு போர்த்திக்கொள்ள
உடையொன்றை
அளித்துக்கொண்டிருக்கிறாள் பெண்ணொருத்தி,
வேலைக்குப் போன அப்பாவைக் கேட்டு
தொந்தரவு செய்துகொண்டிருக்கிறான்
ஒரு சிறுவன்,
மேகத்திற்குள் மறைந்த நிலவு வரும் வரை
காத்திருந்து வந்த பிறகு பார்த்துக்கொண்டு
வீட்டுக்குள் நுழைகிறார் ஒருவர்,
இன்பமும் துன்பமும் கலந்த
இந்த இரவைக் கடப்பதொன்றும்
அத்தனை எளிதில்லை
உண்பதற்காக வாங்கிவந்த உணவை
நாய்க்குட்டிக்கு அளித்துவிட்டு
வீடு திரும்புமெனக்கு!

2

எப்போதோ ஒரு முறை
தொலைக்காட்சியில்
நிகழ்ச்சி பார்த்துக் கொண்டிருக்கும்போது
மின்சாரம் தடைபடுகிறது...
எப்போதோ ஒரு முறை
ஊருக்குப் புறப்படும் போது பேருந்து
வரமறுக்கிறது...
எப்போதோ ஒரு முறை மழையில் விடுவதற்காக
காகிதக்கப்பல் தயார் செய்வதற்குள்
மழை நின்று விடுகிறது...
எப்போதோ ஒரு முறை
குளிக்க நதிக்கு சென்றால்
வற்றிக்கிடக்கிறது...
எப்போதே ஒரு முறை போட்டி
தேர்வில் வெற்றி பெற்றிருந்தால்
தேர்வு ரத்து செய்யப்படுகிறது...
எப்போதோ ஒரு முறை
எதிர் வீட்டு குழந்தையின் புன்னகையை பார்க்க
நினைத்தால் அம்மாவிடம் அடிவாங்கி
அழுதுகொண்டிருக்கிறது...
இந்தக் கவிதையை
எப்படியேனும் முடிக்க நினைக்கையில்
பேனாவின் மை தீர்ந்து போகிறது!

மு. முபாரக்
<ammubarak2011@gmail.com>

# வீரப்பன் வாழ்ந்ததும் வீழ்ந்ததும்

## ஆரூர் பாஸ்கர்

வீரப்பன் குறித்து பொதுவெளியில் பல செய்திகள் உலவுகின்றன. அவற்றில் கற்பனைகளையும் புனை சுருட்டுகளையும் நம்மால் பிரித்து பார்க்க இயலாது. இந்நிலையில், வீரப்பனை முதலில் நேர்காணல் செய்து வெளி உலகுக்கு கொண்டு வந்தவர், அவரை முதலில் படம் எடுத்தவர், அவரை முதலில் வீடியோ படம் எடுத்தவர், பலமுறை அவரை நேரில் சந்தித்து பழகியவர், வீரப்பன் பேச்சுவார்த்தையின் போது அரசு தரப்பாக சென்ற தூதுக்குழுவில் இருந்தவர் எனப் பல வழிகளில் வீரப்பனை நன்கு அறிந்தவரான சிவா பார்வையில் எழுதப்பட்டது என்பது இந்நூலை நம்பிக்கையுடன் வாசிக்கத் தூண்டியது. காடுகளோடும் அங்குள்ள மனிதர்களோடும் தொடர்பில் உள்ள நூலாசிரியரின் பல்லாண்டுகால உழைப்பால் வீரப்பனின் இளமைகாலம் முதலான வரலாறு இந்த நூலில் மிகச் சிறப்பாக பதிவாகியிருக்கிறது. இந்த நூல், வீரப்பன் குறித்த எனது பார்வையைச் சற்று விசாலப்படுத்தியது என்று கூட சொல்லலாம்.

வீரப்பன் ஒரு தனி மனிதனாகவோ, இல்லை ஒரு சிறு குழுவாகவோ அரசு எனும் பலம் பொருந்திய அமைப்புடன் தொடர்ச்சியாக 30 ஆண்டுகள் சண்டை போட்டு மரணித்திருக்கிறார். தனிமனித ஒழுங்கம் மிக்கவராக, குணம் உள்ளவராக, கொடை உள்ளம் கொண்டவராக, மிகப்பெரிய வீரனாக, ஆதர்சன புருசராக பலருக்கும் இருந்திருக்கிறார்; இப்போதும் இருக்கிறார். ஆனால், அவரும் தன் வாழ்வில் பல சறுக்கல்களைச் சந்தித்திருக்கிறார்; பல சமயங்களில் தவறான முடிவுகளையும் எடுத்திருக்கிறார். தனது தலைமறைவு வாழ்வில் பல எதிரிகளை விதவிதமாக கொன்றிருக்கிறார். 'தைரியமிருந்தால், காட்டுக்குள் வந்து என்னை பார்..', 'நான் சரண்டைவது பற்றி பேச வேண்டும்', 'சமாதானம் பேசலாம் வாங்க ...' என ஆளுக்கு ஏற்றாற்போல் நயவஞ்சகமாக காட்டுக்குள் அழைத்து வந்து கொன்றிருக்கிறார். அதற்கு பதிலடி தரும் வகையில்தான் காவல்துறை அவரைக் காட்டுக்கு வெளியே கொண்டு வந்து கொன்றுவிட்டார்களோ என்னவோ.



இன்று பொழுதுபோக்கிற்காக காக்கா, குருவிகளை சுட்டோம் என்று கூட வெளிப்படையாக எழுதமுடியாத, சொல்லமுடியாத நாட்களில் நாம் இப்போது இருக்கிறோம். ஆனால், 25 ஆண்டுகளுக்கு முன்போ வீரப்பன் வேட்டையில் அதிரடிப்படையினரால் அப்பாவிகளும் பலவித துன்பங்களுக்கு உள்ளாகியிருக்கின்றனர். வீரப்பனும் தன் பங்கிற்கு எதிரிகளையும் நம்பிக்கை துரோகிகளையும் அரசு அலுவலர்களையும் ஆள்காட்டிகள் என பொதுமக்களையும் படுகொலை செய்திருக்கிறார்.

இதனிடையே, 30 ஆண்டுகளுக்கு மேலாக வீரப்பனுக்கு உதவும் பழங்குடியினர் ஒருபுறம், வீரப்பனைப் பிடிக்க காவலர்களும் அவர்களுக்கு உதவும் ஆட்களும் மறுபுறம் என இரண்டு குழுக்களாக தொடர்ந்து செயல்பட்டிருகிறார்கள். இந்த இரண்டு குழுக்களுக்கிடையே நடந்த தொடர் மோதல்கள் ராஜ்குமார் கடத்தலுக்கு பின் படிப்படியாக குறைந்து வீரப்பன் மரணத்தோடுதான் முடிவுக்கு வந்திருக்கிறது.

ஒரு நாகரீக சமூகமாக காட்டிக் கொள்ளும் நாம், வேட்டைச் சமூகத்தைச் சேர்ந்த ஒரு மனிதனை அவனுடைய குலத்தொழிலை விடுத்து பொது சமூகத்துக்குள் கொண்டுவரும் முயற்சியில் தோல்வி அடைந்திருக்கிறோம். அதற்காக, பலநூறு யானைகள், மனிதர்கள், பல்லாயிரக்கணக்கான மரங்கள் எனப் பெரிய விலை கொடுத்திருக்கிறோம்.

இந்த நூலில் 'வீரப்பன்' என்பது பல இடங்களில் 'ஈரப்பன்' என்றிருக்கிறது. இது அச்சுப்பிழை அல்ல. பேச்சு வழக்கில் அவர் அப்படியே அழைக்கப்பட்டார் என்பதும், வீரப்பன் தனது ஆரம்ப காலகட்டங்களில் மொழுக்கன் என அறியப்பட்டதும் போன்ற பல தகவல்களை ஆசிரியர் பதிவு செய்திருக்கிறார். இதனுடன், தொய்வில்லாத, இயல்பான



நடை. திரைக்கதை நகர்வதுபோல நிகழ்வுகள் கண்ணெதிரில் நடந்தேறுகின்றன. வலிந்துதிணிக்காமல் உரையாடல்களில் வரும் இயல்பான நகைச்சுவை அதற்கு மேலும் வலுசேர்க்கிறது.

வீரப்பனுடனான பேச்சுவார்த்தை நிலவரத்தை நக்கீரன் ஆசிரியர் அன்றைய தமிழக முதல்வரிடம் தெரிவித்து விட்டு திரும்பும் வழியிலேயே, அதன் வீடியோவை ஒளிபரப்ப, சன் டிவி கலாநிதி மாறன் அழைத்திருக்கிறார். இதை வாசிக்கும் போது அக்காலகட்டத்தில் வீரப்பன் எந்த அளவு வியாபாரப் பொருளாகஇருந்திருக்கிறார் என்பதையும் தெரிந்துகொள்ள முடிகிறது.

வீரப்பன் தேடுதல் வேட்டையின் தேக்கத்துக்கு தமிழக காவல்துறை அதிகாரிகள் மட்டத்தில் அப்போதுஇருந்த அதிகார போட்டியையும் ஆசிரியர் ஆதாரங்களுடன் நூலில் சுட்டிக்காட்டுகிறார்.

நடிகர் ராஜ்குமார் நன்றாக தமிழ் பேசினார் எனவும் சிவா பதிவு செய்திருக்கிறார். ராஜ்குமார் கடத்தல் விவகாரத்தில் தனது அனுபவப் பாடமாக ஆசிரியர் பகிர்ந்திருக்கும் பல தகவல்கள் கவனிக்கப்பட வேண்டியவை. குறிப்பாக, ராஜ்குமார் கடத்தலின் போது பணம் முன்னே போனதால்தான் அவருடைய விடுதலை தள்ளிப் போனது எனக் குறிப்பிட்டிருக்கிறார். அதற்கு வலு சேர்க்கும் வகையில் அவர் சொல்லும் சம்பவங்கள் நம்மை யோசிக்க வைக்கின்றன. வீரப்பனிடம் பிணைக்கைதியாக இருந்த ராஜ்குமார் நாளாக நாளாக அவரிடம் பிடிப்பு ஏற்பட்டு வீரப்பனை நேசிக்கத் தொடங்கினார் என்ற செய்தி 'Stockholm syndrome' கோட்பாட்டை நமக்கு உறுதிபடுத்துகிறது.

An empty mind is devil's workshop என்பது போல அரசை மிரட்டி பெற்ற பணத்தை வைத்துக் கொண்டு வீரப்பனால் வெந்ததைத் தின்று காட்டுக்குள் நிம்மதியாக வாழ இயலவில்லை. தொடர்ச்சியாக அரசுக்கு ஏதாவது விதத்தில் தொந்தரவும் தலைவலியும் கொடுத்திருக்கிறார்.

தன்னை ஓர் 'போராளி' என்ற ஒரு நிலைக்கு உயர்த்திக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் இருந்ததாலோ, அல்லது காட்டில் தன் உதவிக்கு ஆட்கள் வேண்டும் என்ற எண்ணத்தாலோ, வெளியில் இருந்து தொடர்ந்து தொடர்பு எடுக்க முயற்சி செய்தபடி இருந்திருக்கிறார், வீரப்பன். அந்த முயற்சி சமயங்களில் வெற்றி பெற்றும் இருக்கிறது. ஆனால், துரதிஷ்டவசமாக நகர்புற மனிதர்களால் வேட்டைக்காரரான வீரப்பன் போல அடிப்படை வசதிகளற்ற நாடோடி வாழ்க்கை வாழ இயலவில்லை. ஆபத்துகள் நிறைந்த காடும் அந்த வாழ்வும் வெளி மனிதர்களை தொடர்ச்சியாக வெளித்தள்ளிக் கொண்டே இருந்திருக்கிறது.

வீரப்பன் மரணத்துக்கு பின் உள்ள மர்மம்




தொடர்பாக ஆசிரியர் தனது கள ஆய்வின் முடிவுகளை நான்காவது பாகத்தில் விரிவாக பகிர்ந்திருக்கிறார் (வண்ணப்படங்களுடன்). கூடவே, சில சமூக ஆர்வலர்களால் முன்னெடுக்கப்பட்ட உண்மை அறியும் குழுவின் போலித்தனங்களையும் விவரித்திருக்கிறார். அதுபோல, டிஜிபி விஜயகுமார் எழுதிய Veerappan : Chasing the brigand ஆங்கில நூலில் சொல்லப்பட்ட சம்பவங்களின் முரண்களையும் ஆசிரியர் நுட்பமாக முன்வைக்கிறார்.

அறிவியல் பூர்வமாக பல தகவல்களை சொல்ல வாய்ப்புள்ள மருத்துவர் வள்ளிநாயகம் உட்பட இதில் நேரடி தொடர்புடைய பலரும் இன்னமும் அரசு பதவிகளில் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் தரப்பு உண்மையை சொல்ல நாம் இன்னமும் பல ஆண்டுகள் காத்திருக்க வேண்டி இருக்கலாம். இல்லை அவை வெளிவரலாமலே கூட போகலாம்.

ஆனால், எது எப்படியோ வீரப்பன் மரணம் தொடர்பாக, ஒரு சிலரின் ஆழ்மன இருளில் புதைத்து கிடக்கும் உண்மைகளை தேட இந்தச் சமூகம் தொடர்ந்து முயற்சி செய்துகொண்டே இருக்கும். இருக்க வேண்டும்.

வீரப்பன் பாலாற்றில் குண்டு வைத்ததில் பொதுமக்கள், காவலர்கள் என 22 பேர் கொல்லப்படுகிறார்கள். அந்த குண்டுகள் காடுகளில் அப்போதுஇயங்கிய கல்குவாரிகளில்இருந்துவந்ததால் கர்நாடக, தமிழக காடுகளின் கல்குவாரிகளுக்கு தடை வருகிறது. சுமார் 20 ஆண்டுகள் (அவருடைய மரணம் வரை) இந்தத் தடை நீடித்ததால் சூழலியல் நோக்கில் சிலரால் வீரப்பன் வனப் பாதுகாவலனாக பார்க்கப்பட வாய்ப்புள்ளது என்பதையும் ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

இந்த நூலில் காடு குறித்தும், அங்கு பயன்படுத்தப்படும் சொல்லாடல்கள், தாவரங்கள், விலங்குகள் குறித்தும் பல குறிப்புகள் விரவிக் கிடக்கின்றன. அதுவே, 'வீரப்பன் வாழ்ந்தது வீழ்ந்ததும்' எனும் இந்த நூலை நேரப் போக்கிற்கான வாசிப்பு என்ற நிலையில் இருந்து அடுத்தக் கட்டத்துக்கு எடுத்துச் செல்கிறது.

அடுத்தடுத்த பதிப்புகளில் சேர்க்க வேண்டிய திருத்தங்கள் என நூல் ஆசிரியருக்கு சுட்டிக்காட்ட வேண்டிய சில இடங்களும் இருக்கின்றன. உதாரணமாக, ராஜ்குமார் கடத்தலின் முக்கிய நிகழ்வுகளை தேதிவாரியாக ஒரு வரைபடமாக கொடுக்கலாம். அதுபோல, படிக்கும் போது படங்கள், நிலப்படங்கள் (maps), வீடியோக்களை இணையத்தில் எளிதாக பார்க்கும் QR code இணைப்பு தரலாம். ஆண்டு, வீரப்பன் வேட்டையில் பதிவுசெய்யப்பட்ட மரணங்களின் புள்ளி விவரங்கள் ஆசிரியரிடம் கைவசம் இருக்கும் பட்சத்தில் அவற்றை ஒரு பட்டை வரைபடமாக (bargraph) கொடுக்கலாம். அது வீரப்பன் தீவிரமாக செயல்பட்ட காலகட்டத்தை எளிதாக நம்மால் புரிந்துகொள்ள உதவும்.

எழுத்துப் பிழைகள் மலிந்து பல புத்தகங்கள் வரும் இந்த நாட்களில் இந்த நூல் சிறப்பாக வடிவமைக்கப்பட்டு வந்திருக்கிறது. வீரப்பன் குறித்து சில ஆவணப்படங்கள் சமீபமாக வெளியாகி இருக்கிறன. அவை எழுப்பியுள்ள ஐயங்களைப் போக்கும் வகையில் 4வது நூல் மறுபதிப்பு செய்யவேண்டியதன் தேவை இருப்பதையும் இங்கே குறிப்பிட வேண்டியிருக்கிறது.

வீரப்பன் உருவாக காரணமாக இருந்த சமூக, பொருளாதார சூழலுக்கு நிலையான தீர்வு காண்பது ஒரு பண்பட்ட சமூகத்தின் கடமை. அதுபோல, நீதிபதி சதாசிவா ஆணையம் (தேசிய மனித உரிமை ஆணையம் அமைத்தது) பரிந்துரைத்த, சிறப்பு அதிரடிப்படையால் பாதிக்கப்பட்ட அனைவருக்கும் இழப்பீடு, உரியவர்களுக்கு சிறை போன்றவை முறையாக அமல்படுத்தப்பட வேண்டும். அந்தக் குறைந்தபட்ச அறத்தைக் கூட ஒரு சமூகம் இன்னமும் செயல்படுத்த மறுப்பது அவலம், அவமானமும் கூட.

ஆரூர் பாஸ்கர் <aarurbass@gmail.com>

---

வீரப்பன்: வாழ்ந்ததும் வீழ்ந்ததும் (நான்கு பாகங்கள்) பெ. சிவசுப்ரமணியம்; விலை ரூ. 2000; வெளியீடு: சிவா மீடியா; தொடர்புக்கு: +91 94434 27327

# அம்மா என்றொரு தேவதை!

## மருதயாழினி பிரதீபா



விடிந்தும் விடியாத என் கனவுகளில்
அம்மா வருவாள்

திறப்பதா வேண்டாமா என்ற
இமைகளின் போராட்டத்திற்கு
விடையாய்
பிள்ளை தூங்கட்டும் என்று
சொல்வாள்

கருக்களில் எழுந்து
ஈர விறகில் அடுப்பெரிப்பாள்
கலங்கியக் கண்களை
துடைத்துக் கொண்டே
காலை உணவை
கைகளில் எடுப்பாள்!

இன்னும் இரண்டு வாய் என்று
என் பின்னாலேயே ஓடி வருவாள்
அம்மா ஓடாதே என்று பதறி
கனவு கலைந்த நாளெல்லாம் உண்டு!

கருக்கல் தொடங்கி
கதிரோன் மறையும் வரை
என் நொடிகளின் நாடிக்குள்
மறைந்துக் கிடக்கிறாள்

அம்மா விடியலில் எழுவாள்
அம்மா பசிக்குது என்றாள் துடித்துப் போவாள்
அள்ளி அள்ளி ஊட்டி விடுவாள்
ஆசையாய் முத்தமிடுவாள்

இப்படி
என் நினைவுக் கொடிகள்
நாள் முழுவதும் வேண்டிய போதெல்லாம்
அவள் நினைவுகளைப்
பூத்துக் கொண்டேயிருக்கிறது

ஆயிரம் கல் தொலைவில் அவள்
ஆனால், அவள் மடியின் கதகதப்பு
அந்த அழகியப் பெருஞ்சிரிப்பு
அவள் மொழியெனும் மத்தாப்பு
எல்லாம் உள்ளத்தின் அடுக்குகளில் பத்திரமாய்!

அம்மா
உன் உதிரத்தில் பூத்த
உயிர்ப்பூ நான்
உன்னால் உலகில் பூத்து
உன்னால் மணம் வீசி
உன்னால் வீற்றிருக்கிறேன்

உனக்காய் இருப்பேன் என்றும்
உம் என்று சொல்
உன் அருகில் நான் வருவேன்
என் அம்மா என்னும் தேவதைக்காய்!!!

மருதயாழினி பிரதீபா
<prathibapremkumar@gmail.com>

# சிவப்பு மூச்சு

## நிஜந்தன்

மனிதன் மீது கார் ஏறக் கூடாது.

என் கார் ஏறியது.

என் அலுவலக வளாகத்தின் கார் நிறுத்துமிடம் இருள் சூழ்ந்து கிடந்தது. அங்கு கீழே ஒருவன் படுத்துக் கிடந்தான். கவனித்தேன். கார் எடுக்கும்போது அது மறந்துபோனது. வண்டியை முன்னே நகர்த்தியபோது எதிலோ ஏறி இறங்கியது போல இருந்தது. “அய்யோ அய்யோ” என்று அலறியபடி அவன் எழுந்தான்.

ஒருவனைக் கொன்றுவிட்டேன் என்று புரிந்தது.

அவன் கார் முன்னால் பதறிக்கொண்டு இருந்தான்.

நான் இறங்கிப் போனேன். இருதயம் அடித்துக்கொண்டது. பயத்தில் கண்கள் இருண்டன.

அவனை நெருங்கினேன். அவன் மெல்லிய தேகம் கொண்டிருந்தான். அழுக்குச் சட்டை அணிந்திருந்தான். வாயில் வெற்றிலை குதப்பியிருந்தான். கடுமையாகக் குடித்திருந்தான். தள்ளாடினான்.

“நெஞ்சு மேல கார் ஏறி இறங்கிடுச்சு” என்றான். “வண்டி ஓட்டத் தெரியலையா” என்றான்.

நெஞ்சைப் பிடித்துக்கொண்டு நின்றான். மூச்சு வாங்கினான். அவன் தோளைத் தொட்டேன். அவன் கண்கள் செருகிச் சென்றன.

அவன் மீது எந்தக் காயமும் தெரியவில்லை. அவனுடைய நெஞ்சை இலேசாகத் தொட்டேன். அவன் வலி தாங்காமல் தள்ளி நின்றான். நெஞ்சின் தோல் மீது இலேசாகக் கீறல் தெரிந்தது.

“ஹாஸ்பிடல் போகலாம்” என்றேன். அவன் எதுவும் பேசவில்லை.

அவன் படுத்துக் கிடந்த போர்வையை உதறி சுவர் ஓரத்தில் தள்ளினான்.

அவன் பெயரைக் கேட்டேன். “குமார்” என்றான். அவன் அந்தப் பகுதியில் கார்களுக்கான மின்சாரப் பணி செய்துவந்தான்.

குமார், அருகில் ஒரு திட்டில் அமர்ந்துகொண்டான். அவனுக்கு வியர்த்து வழிந்தது.



மருத்துவமனைக்கு மீண்டும் அழைத்தேன்.

“வேண்டாம் சார். சரி ஆகிடும்” என்றான்.

அந்த நிலையில் அவனை விட முடியாது என்று நினைத்தேன். அவன் கொஞ்ச நேரத்தில் மயங்கி இறந்துபோய்விடக் கூடும் என்று பயந்தேன்.

“வேண்டாம் சார். தைலம் தேய்த்தால் வலி போய்டும்” என்றான்.

அப்படி அவனை அனுமதிக்க நான் விரும்பவில்லை.

“கிளம்புங்கள். இப்போது தெரியாது. பிறகு அது பாதிப்பைத் தரும்” என்றேன்.

“அட. வேண்டாம் சார். வேணும்னா ஏத்தினீங்க, இல்லையே” என்று அவன் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

பயமாக இருந்தது. பதற்றத்தில் நான் உதறினேன்.

அவனிடம் என் செல்பேசி எண்ணைக் கொடுத்தேன். அவனுடைய எண்ணையும் நான் வாங்கிக்கொண்டேன்.

வண்டி எடுத்து நகர்ந்தேன்.

காவல் நிலையம் சென்றேன். நடந்ததைக் கூறினேன். என்னை அதிசயமாகப் பார்த்தார்கள். குற்றத்தை வந்து ஒப்புக்கொள்கிறவனின் அவலம் கண்டு நகைப்பது போல் அவர்கள் இருந்தார்கள். நிகழ்விடத்திற்கு வந்து பார்த்தார்கள். அதற்குள் குமார் காணாமல் போயிருந்தான். என் பெயர், முகவரி, தொலைபேசி எண் வாங்கிக்கொண்டு, “கவலை வேண்டாம். அவசியம் எனில் அழைக்கிறோம்” என்று சொல்லி காவலர்கள் சென்றார்கள்.

குமார் இறந்துவிடுவானோ கவலைக்கிடமான நிலைக்குச் சென்றுவிடுவானோ என்று நினைத்து என் மூளை படபடத்தது.

எனக்கு வருகிற ஒவ்வொரு தொலைபேசி அழைப்பும் அவன் மிகுந்த உடல்நலக் குறைபாட்டில் அழைப்பது போலத்தான் இருந்தது.



அந்தப் பயல் மருத்துவமனை வந்து சோதனை செய்துகொண்டிருந்தால் உண்மை நிலையாவது தெரிந்திருக்கும்.

என் காரை நான் மிகவும் விரும்பினேன். அதைக் காட்சியகத்தில் பார்த்தபோதே மிகவும் பிடித்துப் போனது. அதன் சக்கரங்களில் கொஞ்சம் சிவப்பு ஒட்டியிருந்தது. ஊழியரிடம் அது இரத்தமா என்று கேட்டேன். அவன் சிரித்துக்கொண்டே புதிய காரின் சக்கரத்தில் இரத்தம் ஒட்டிக் கிடக்குமா என்று கொஞ்சம் நையாண்டி பாவனையில் கூறினான். அந்தக் கண்ணாடி அறையில் எங்கோ ஒட்டியிருந்த ஒரு ஸ்டிக்கரின் எதிரொளிப்புதான் என்று அவன் கூறிவிட்டான். கார் வாங்கி சாலையில் ஓட்டிக் களித்தபோதும் அதன் முன் சக்கரங்களில் சிவப்பு நிறம் ஒட்டிக் கிடந்தது போல எனக்கு இருந்தது. அது சாலையில் தூவிவிடப்பட்ட பெயிண்டாக இருக்கும். அல்லது பூஜைகளுக்காக வீசிச் சென்ற குங்குமம் நிறைந்த பூசணியின் மிச்சமாக இருக்கும். புதிய காரின் சக்கரங்களில் இரத்தம் ஒட்டிக் கிடப்பதில்லை.

என் நீண்ட கால கார் ஓட்டும் அனுபவத்தில் எந்த உயிர் மீதும் நான் இடித்ததில்லை. சாலையில்

ஊர்ந்துபோகும் எறும்பு போன்ற பூச்சிகள் என் கார் சக்கரத்தில் சிக்கி உயிரிழந்திருக்கக்கூடும். அதற்காக நான் எப்போதும் வருந்தியிருக்கிறேன்.

கண்ணாடியில் என் முகம் ஒரு கொலைகாரன் முகம் போல இருந்தது. தலை முடி சற்று மேலே படிந்திருந்தது. கண்களில் ஒரு தாழ்வு மனப்பான்மை வெறித்தது. உதடு தடித்து பற்கள் வெளித் தெரிந்தன. மோவாயில் இறுக்கமும் தாடைகளில் விடைப்பும் இருந்தன.

குமார் இறந்துபோனால் நான் கொலையாளியா?

நண்பர்கள் எனக்கு ஆலோசனைகள் வழங்கினார்கள். நான் தவறுதலாக வண்டியை மோதிவிட்டேன். அவனை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று சிகிச்சை அளிக்க நான் முயன்றேன். வண்டி ஏறி காயம் ஏற்பட்டிருந்தால் அவன் எழுந்து நடமாடியிருக்க மாட்டான். அவனுக்கு ஒன்றும் ஆகவில்லை. ஆகாது. மேலும் நான் காவல் நிலையத்தில் புகார் கூறிவிட்டேன். இனியும் நான் ஒன்றும் செய்ய முடியாது. நான் மனதில் குற்றவுணர்வு இல்லாமல் இருக்க வேண்டும். அச்சம் கூடாது.

ஆனால், என்னால் முடியவில்லை. முடியாது.

பெரிய மரம் ஒன்றின் கிளைகள் முறிந்துவிழும் சப்தம் தொடர்ந்து என் செவிகளில் கேட்டபடி இருந்தது. அது ஓர் உயிரின் அழிவின் சைகையாக என்னுள் ஓடிக்கொண்டே இருந்தது. உலகின் எந்த மூலையிலாவது ஒரு உயிர் அடங்கியிருக்கும். அல்லது அதற்கான தயாரிப்பில் இருக்கும். எல்லா உயிர்களும் மரணம் எனும் மாற்றத்திற்கு உட்பட்டவை. நானும் எப்படியும் ஒரு நாள் இறந்துவிடுவேன். என் காரில் அடிபட்ட குமாரும் ஒரு நாள் இறந்துவிடுவான். அவன் நாளை இறந்துபோகலாம். அல்லது அடுத்த வாரம். அல்லது அதற்கு அடுத்த வாரம். அடுத்த ஆண்டு. எப்போது இறந்தாலும் இந்த மோதலின் விளைவாக அவன் இறந்துபோய்விட்டான் என்றே நான் நினைப்பேன். நான் அதிலிருந்து தப்பிக்க முடியாது. மாட்டேன்.

அடுத்த நாள் குமாரை அலுவலக இடத்தில் பார்த்தேன். என் காரை தூரத்தில் பார்த்ததும் அவன் நெஞ்சைப் பிடித்துக்கொண்டான். என் இருதயம் அடித்துக்கொண்டது. அவன் அருகில் வண்டி நிறுத்தி இறங்கிக்கொண்டேன். நெஞ்சு வலிக்கிறது என்றான். மருத்துவமனைக்கு அழைத்தேன். வேண்டாம் என்றே மறுத்தான். நான் காவல்துறையினரை அழைத்து வந்தது அவனுக்குத் தெரிந்திருந்தது. அவன் அதில் கொஞ்சம் அதிர்ந்துபோயிருந்தான். குற்றம் செய்தும் நான் தப்பித்துவிடுவேன் என்றே அவன் உள்ளுக்குள் உருவகித்து வைத்திருந்தான். நான் அவனை மருத்துவமனைக்கு வர நிர்ப்பந்திப்பது அவனுடைய சூழலில் இருந்த மற்றவர்களுக்கும் புரிந்தது. நான் தவறிலிருந்து ஓடிவிடவில்லை என்று அவர்கள் புரிந்தவர்கள் போல இருந்தார்கள்.

அடுத்த இரண்டு வாரம் குமாரைக் காணவில்லை. எனக்குப் பயமாகப் போய்விட்டது. இனி அவனைப் பார்க்க முடியாது என்று கலக்கம் அடைந்தேன். அவன் வீட்டில் சுருண்டு இறந்துபோயிருக்கலாம். அல்லது கடும் வலியால் ஏதோ ஒரு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கலாம். என்னிடம் அதைச் சொல்லக்கூட பலர் தயங்கியிருக்கலாம். என்னால் ஓர் உயிர் மடிந்துபோக இருந்தது. என்னால் ஒருவன் இறந்துபோவான். நான் மட்டும் உயிர்வாழ்வேன். குற்றவுணர்வோடு.

அடுத்து குமார் எதிர்ப்பட்டபோது கொஞ்சம் கால் தாங்கி நடந்தான். நான் அருகில் சென்றபோது அவன் கால் பிடித்துக்கொண்டு காலில்தான் கார் ஏறிய வலி என்றான். மருத்துவமனை போகலாம் என்றேன். வேண்டாம் என்று கூறிக்கொண்டான். அவன் என்னிடம் பணம் எதிர்பார்த்தான் போல இருந்தது. நான் அதற்குத் தயாராக இருக்கவில்லை. அது அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது. அவன் மீது நடத்தப்பட்ட தாக்குதலுக்கு நான் கொடுக்கும் பணமே போதுமானது என்பது அவனுடைய எதிர்பார்ப்பாக இருந்தது. நான் அதற்கு இணங்கவில்லை. அது மட்டுமே அவன் என் மீது சாட்டும் குற்றமாக அவன் கண்களில் தெரிந்தது. அவன் உயிர்வாழ்ந்தால் போதும் என்றே நான் நினைத்தேன்.

அவன் உயிர்வாழ்வானா?

என் கார் எதன் மீது ஏறி இறங்கினாலும் அது மனிதன் மீது ஏறி இறங்கியது போலத்தான் எனக்கு இருந்தது. ஒரு கட்டை, அல்லது ஒரு கல், அல்லது ஒரு மூட்டை என்று எதன் மீது சக்கரம் ஏறி இறங்கினாலும் ஒரு மனிதன் முனகிச் செத்துப் போவது போலத்தான் என் செவிகளுக்குக் கேட்டது. என் கார் ஏறி குமார் தினமும் செத்துக்கொண்டிருந்தான். அல்லது குற்றவுணர்வில் நான் மடிந்து கொண்டிருந்தேன்.

நகரில் சாலையில் படுத்துக் கொண்டிருந்த ஒருவன் மீது ஒரு நடுத்தர வகை வாகனம் ஏறி இறங்கி அவன் உயிரிழந்தான். கார் பறிமுதல் செய்யப்பட்டு, ஓட்டியவனிடம் விசாரணை நடத்தப்பட்டது. ஓட்டுநருக்கு அபராதம் விதிக்கப்பட்டு விடுவிக்கப்பட்டான். வழக்குப் பதிவு செய்யப்பட்டதால் காப்பீடு பணம் இறந்துபோனவனின் குடும்பத்திற்குச் போய் சேர்ந்தது.

இறந்துபோனவன் குமார் போலவே இருந்தான். மீண்டும் ஒரு முறை குமார் கார் ஏறும் நிகழ்வில் சிக்கியிருக்க மாட்டான். அவன் வேறு யாரோவாகத்தான் இருக்க வேண்டும். கார் ஏறி இறந்துபோகிறவர்கள் அனைவரும் குமாராக இருக்க

முடியாது. குமார் தொடர்பான நிகழ்விலும் அவனுக்கு அடிபட்டிருந்தால் அவனுக்குக் காப்பீடு கிடைக்க ஏற்பாடு செய்யலாம். அவன்தான் மருத்துவமனைக்கே வராமல் தவிர்த்தானே. அவன் ஏதாவது ஒரு காலத்தில் இறந்துபோனால் அது என்னால்தான் என்ற குற்றவுணர்வைக் கொடுத்து என்னைக் குலைக்கும் செயல் கொண்டவனாக அவன் இருக்கிறானே. எப்போதுதான் என் சுமை நீங்குமோ!

அலுவலகத்தின் வாகனம் நிறுத்துமிடத்தில் ஒரு பெண் கார்களைக் கழுவிக்கொண்டிருந்தாள். சற்றுப் பருத்த தேகம் கொண்டிருந்தாள். எண்ணெய் வழிந்த முகத்தில் ஒரு வசீகரம் இருந்தது. பற்கள் நேர்த்தியாக அமைந்திருந்த விதம் அவளுடைய தோற்றத்தில் பொலிவை அதிகரித்திருக்க வேண்டும். தன் வேலை உண்டு தான் உண்டு என்று அவள் இருந்தாலும் அவளுடைய தலை அசைவும் முகத்தைத் திருப்பும் விதமும் அவள்பால் கண்களைப் பாய வைத்தன. அவளைத் தினமும் பார்க்க முடியவில்லை. அல்லது நான் அலுவலகத்திலிருந்து வண்டி எடுக்கும் நேரம் அவள் எப்போதும் இருக்கவில்லை.

வாகனம் நிறுத்தும் இடத்தில் யார் இருந்தாலும் எனக்கு குமார் நினைவாகவே இருந்தது. அவ்வப்போது சிலர் கீழே அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படிச் செய்ய வேண்டாம் வண்டி ஏறி சாகும் ஆபத்து ஏற்படும் என்று நான் எச்சரிக்க நினைத்தேன். நானே அதற்குக் காரணமாக இருந்துவிடலாம் என்றும் கூற நினைத்தேன். கொலைகாரன் என்று பறைசாற்றிக்கொள்வதில் எனக்குத்தான் எத்தனை ஆவல் என்று என்னை என் நண்பர்கள் கடிந்துகொண்டார்கள். நான் கொலை செய்யவில்லை. கொலை செய்துவிட்டது போன்ற மனதுடன் நான் அலைந்து கொண்டிருந்தேன்.

என் காரையும் கழுவிச் சுத்தம் செய்யலாமா என்று கார் கழுவும் பெண் ஒரு முறை கேட்டாள். அது என்னிடம் பேசுவதற்காக அவள் ஏற்படுத்திக்கொண்ட சாக்கு என்று எனக்குத் தோன்றியது. அவளுக்குக் கொஞ்சம் பணமும் தேவைப்பட்டிருக்கலாம். என் வீட்டு வளாகத்தின் கார் சுத்தம் செய்யும் பையன் வராத நாள் ஒன்றில் அவளுக்கு அந்தப் பணியை நான் கொடுத்தேன். அவள் கேட்டதைவிட கொஞ்சம் அதிகப் பணம் கொடுத்தபோது மகிழ்ந்து சிரித்தாள். புன்னகை அரசி என்று அவளுக்குப் பட்டம் தந்துவிடலாம்.

புன்னகை அரசி சில நாட்கள் வந்தாள். பல நாட்கள் காணாமல் போய்விட்டாள். ஏன் அவள் வரவில்லை என்று கேட்கவும் மனம் ஒப்பவில்லை. அப்படிக் கேட்டு அவளிடம் நட்பு வளர்க்கும் நோக்கம் எனக்கு இருக்கவில்லை. ஒரு நாள் புன்னகை அரசியின் முகம் வீங்கிக் கிடந்தது. பல் வலி இருக்கலாம் போல் இருந்தது. அதைக் கேட்டபோது அவள் பதில் சொல்லவில்லை. கேட்டிருக்கக் கூடாது என்று நினைத்தேன். அவள் முகத்தில் வீக்கம் கொஞ்சம் குறைந்த பின்னால் எதுவும் நான் கேட்கவில்லை. அவளாகத்தான் வந்து பேசினாள். கணவன் குடித்துவிட்டு அடித்ததால் வந்த வினை சரி ஆகிவிட்டது என்றாள். கவனமாக இருக்க வேண்டும் என்று மட்டும் சொல்லிவிட்டு நான் கடந்துவிட்டேன். அதற்குப் பிறகு அவள் பல நாள் காணாமலே போனாள்.

குமார் அவ்வப்போது எதிர்ப்பட்டான். கார்களின் பானெட்டுக்குள் தலை கவிழ்த்தபடி அவன் வேலை செய்தபடியே இருந்தான். அவன் என்னைப் பார்த்தும் எந்த வினையும் ஆற்றவில்லை. அவன் என்னை உதாசினம் செய்தான். அவன் சாவதற்குத் தயார் ஆகிவிட்டவன் போலவே எனக்கு இருந்தது. அவன் கண்கள் பெருத்துக் காணப்பட்டன. விழித் திரைகளில் இருந்த படலம் அவனுக்குள் உயிர் செல்கள் குறைந்து வருகின்றனவோ என்று எண்ண வைத்தது. எனக்கு இருக்கும் அச்சத்தில் நானே அவனைக் கொன்றுவிடுவேனோ என்று எனக்குத் தோன்றியது. அவன் செத்துவிடக் கூடாது. அப்படிச் செத்தால் நான் வாழ்நாள் முழுக்க உயிர் வலி சுமந்திருக்க வேண்டும்.

ஒரு முறை குமாரும் புன்னகை அரசியும் அருகருகே நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தம்பதியினர் என்று எனக்குப் புரிந்தது. புன்னகை அரசியிடம் கேட்டபோது ஆம் என்று சற்று வெட்கத்துடன் ஒப்புக்கொண்டாள். ஆனால், உள்ளூரக் கோபமும் அவளிடம் இருந்தது. கேட்டிருக்கக் கூடாது என்று நினைத்தேன் நான். மறுமுறை குமார் கொண்டு வந்த ஏதோ ஒரு தின்பண்டத்தை மிகுந்த மகிழ்வோடு புன்னகை அரசி ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். கணவன், மனைவி உறவில் இதெல்லாம் இயல்பு என்றுதான் இருந்துவிட்டேன்.

புன்னகை அரசி என்னிடம் கொஞ்சம் பேசத் தொடங்கினாள். சாப்பிட்டாகிவிட்டதா, வேலை முடிந்ததா என்ற பேச்சுக்கள் மட்டும் நிகழ்ந்தன. என் வண்டி இடித்த பின்னால் அவளுடைய கணவனுக்கு ஏதாவது பாதிப்பு இருந்ததா என்று கேட்கத்தான் எனக்கு ஆவல் மிகுந்தது. அப்படி ஒரு நிகழ்வு நடந்தது எதுவும் அவளுக்குத் தெரியாது போலத்தான் அவள் இருந்தாள். தெரிந்தும் மறைக்கத் தெரிந்த சாதுர்யம் அவளுக்கு இருந்திருக்க வேண்டும். நான் சற்றும் எதிர்பார்க்காத கணம் ஒன்றில் அவள் மிகவும் வெளிப்படையாக கோபம் கொப்பளிக்க ஒரு வாக்கியத்தைச் சொன்னாள்:

“உங்க வண்டி ஏறியே அந்த ஆள் செத்திருக்கணும்.”

புத்தாடை அணிந்து புன்னகை அரசி கார் கழுவிக் கொண்டிருந்தாள். நான் கவனிக்கிறேனா என்று ஒரு முறை அவள் ஓரக் கண்ணால் பார்த்துவிட்டாள். அவளுக்கு அருகில் போய் அவளுடைய உடல் நலம் விசாரித்தேன். நலம் என்றாள். அது புடவை குறித்த விசாரிப்புதான் என்று அவளுக்கு நன்றாகப் புரிந்தது. அவள் அன்று முழுக்கப் பூரிப்புடன் இருந்தாள். நான் வீட்டிற்குப் புறப்படும்போது அவள் என்னையே மிகுந்த நன்றியுணர்வுடன் பார்த்தபடி இருந்தாள். அப்போது குமார் என்னைப் பார்த்து வண்டி அருகே வந்தான். “இன்னும் நெஞ்சுல வலிக்குது சார்” என்று அவன் சற்றுக் கோபமாகக் கூறினான்.

நான் அலுவலகம் சென்ற ஒரு மதிய நேரத்தில் தொலைவில் குமாரும் புன்னகை அரசியும் கடும் வாக்குவாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். என் கார் நெருங்கிய சமயத்தில் அவன் அவளை அடிக்கத் தொடங்கினான். நான் அதிர்ந்துபோய் நிறுத்திவிட்டேன். அவன் என் கார் கண்ணாடியை உடைப்பது போல அருகே வந்து தட்டினான். நான் கண்ணாடியை இறக்கினேன். “சார். இவள் மேலே காரை ஏத்துங்க சார்” என்று அவன் கோபமாகக் கூறினான். எனக்கு மிகுந்த வருத்தமாக இருந்தது. அவள் நான் ஆதரவாகப் பார்த்தாலே போதும் என்று என்னை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

அதன்பிற்கு இரண்டு நாட்கள் குமாரையும் புன்னகை அரசியையும் காணவில்லை. மீண்டும் என்னைக் கவலை வாட்டியது. ஏதோ ஆகிவிட்டிருக்குமோ என்றுதான் இருந்தது. யாரிடமும் கேட்கும் துணிவில்லை. நான் மிகுந்த கவலையில் இருக்கும்போது குமாரிடமிருந்து எனக்கு தொலைபேசி அழைப்பு வந்தது. நான் சிறிதும் அதை எதிர்பார்த்திருக்கவில்லை. “சார், ஆஸ்பத்திரியில இருக்கேன். நெஞ்சு வலிதான்” என்று அவன் குரல் உடைந்து சொன்னான். அவனைப் பார்க்க உடனே சென்றேன்.

அரசு மருத்துவமனையில் இருந்தான். மருத்துவமனை மிகவும் சுத்தமாக இருந்தது. எங்கும் எலிகள் ஓடவில்லை. குறைந்த நோயாளிகள் இருந்த அறையில் அவன் இருந்தான். அருகில் அவனுடைய மனைவி இருந்தாள். “நெஞ்சுல உங்க கார் ஏறினது இப்போ தெரியுது சார்” என்றான் அவன். அவனுடைய மனைவி என்னையே உற்றுப் பார்த்தபடி இருந்தாள். இல்லை என்பது போல அவள் கண்களில் சைகை காட்டினாள். அவன் அதைப் புரிந்துகொண்டு அவளைப் பார்த்தான். முறைத்தான். கண்கள் விரித்து நாக்கைத் துருத்தினான்.

மருத்துவர் வந்தார். என்னை அவனுடைய அதிகாரி என்று நினைத்துக்கொண்டார். “ரொம்ப குடிக்கறாரு” என்றார் அவர். “ஈரல் கெட்டுடும் போல. கொஞ்சம் கட்டுப்பாடு தேவை” என்றார். அவன் மயங்கியவன் போல உறங்கினான்.

வீடு அருகே திரும்பி மிகவும் மெதுவாகச் சென்றபோதும், இடது புறம் என் கவனம் பிசகி, நின்றிருந்த ஒரு இருசக்கர வாகனம் மீது என் கார் உரசிவிட்டது. அந்த வாகனத்தின் மிதிப் பலகை காரின் பின் சக்கரத்தில் சிக்கி கொஞ்ச தூரம் இழுத்து வந்தது. இறங்கிப் பார்த்தேன். காரின் பக்கவாட்டுப் பகுதி முழுக்க சேதம் ஆகியிருந்தது. கவலையாக இருந்தது. என் கவனம் இப்போது சற்றுக் குறைந்துவிட்டது போலத்தான் ஆகிவிட்டது. காரைப் பழுதுபார்க்கக் கொடுத்து காப்பீடு பெற்று பெயிண்ட் அடித்துச் சரி செய்துவிடலாம். அப்படியே செய்துவிட்டேன். மனிதன் மீது கார் ஏற்றி கொல்லும் அளவுக்கு இது மனச்சிக்கலைக் கொடுத்துவிடாது.

உடல் நலம் தேறி குமார் மீண்டும் அந்தப் பகுதியில் உலவினான். அவன் குடிப்பதை நிறுத்திவிட்டவன் போலத்தான் இருந்தான். புன்னகை அரசி கொஞ்சம் அதிகமாகவே புன்னகை பூத்தாள். கொஞ்சம் இளைத்திருந்தாள். பற்கள் அதிகமாக வெளியே தெரிந்தன. கையில் ஒரு பொட்டலம் வைத்திருந்தாள். நான் எதற்கு என்று கேட்கவில்லை. ஆனால், அறியும் ஆவல் கொண்டிருந்தேன். அவள் கூறினாள். அவளுடைய இரண்டு குழந்தைகளுக்காக அவள் தின்பண்டம் வாங்கிக்கொண்டு சென்றாள். கணவனும் மனைவியும் தோளோடு தோள் உரசியபடி அந்தத் தெருவில் நடந்து சென்றார்கள்.

அடுத்த நாள் நான் அலுவலகம் சென்றபோது ஒரு சிறு கூட்டம் நின்றிருந்தது. என் வரவுக்காகக் காத்திருந்தவர்கள் போல அவர்கள் இருந்தார்கள். குமார் இறந்துவிட்டானோ என்று எனக்கு அச்சமாக இருந்தது. காரிலிருந்து இறங்கியவுடன் நேராக ஒருவர் என்னிடம் வந்தார்.

“சார்... குமார் செத்துட்டான் சார்” என்றார் அவர்.

எனக்கு மூச்சு நின்றுவிடும் போலத்தான் இருந்தது.

“எப்படி” என்றேன். நான் அதைக் கேட்டிருக்கக் கூடாது.

“சம்சாரம் குத்தி கொன்னுடுச்சு” என்றார் அவர்.

எனக்கு பேச்சு வரவில்லை.

என் காரின் சக்கரத்தில் எங்கிருந்தோ சிவப்பு நிறம் எதிரொளித்தது.

நிஜந்தன் <knijanthan@gmail.com>

# கடவுள்

## இந்திரா பார்த்தசாரதி

கல்லைக் கண்டா நாயைக் காணோம்
நாயைக் கண்டா கல்லைக் காணோம்

*பழமொழி*

ஸ்டீஃபன் ஹாக்கிங் முப்பத்திரண்டு வயதிலிருந்து, அவர் உடம்பில் மூளையைத் தவிர ஒரு பாகமும் வேலை செய்ய முடியாமல் செயலிழந்துவிட்டன. ஆனால், இந்நிலையிலும், ஹாக்கிங், சக்கர நாற்காலியில் இருந்துகொண்டே, எலெக்ட்ரானிக் கருவிகள் மூலம் பேசினார், மிகச் சிக்கலான விஞ்ஞானப் பிரச்னைகளைப் பற்றி மிகத் தெளிவாக, பிரமிக்கத் தக்க நூல்களை எழுதினார். நாற்பதாண்டுகளுக்கு மேலாக, இந்நிலையில் இருந்தவாறே, அற்புதங்களை நிகழ்த்திய இவரைப் பார்க்கும் போது, இப்படியொரு மனிதர் இருப்பது சாத்தியமாக இருக்கின்றது என்பதால், யாருக்குமே கடவுள் நம்பிக்கை ஏற்படுவதில் ஆச்சர்யமில்லை. ஆனால், ஸ்டீபன் ஹாக்கிங் தமக்குக் கடவுள் நம்பிக்கை ஏதும் கிடையாது என்று சொன்னார்.

கடவுள் நம்பிக்கை இல்லை என்று சொன்னவர், பிரபஞ்சத்தில், வேற்று நட்சந்திர மண்டலங்களில் உயிரினம் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றன என்றும் சொன்னார். 'பிரபஞ் சத்தில் நூறு பில்லியன் (லட்சம் கோடி) நட்சத்திர மண்டலங்கள் (galaxies) இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் உள்ளன. இவற்றில் உயிரினங்கள் உள்ளன, இல்லை என்று இப்பொழுதுள்ள நம் பகுத்தறிவைக்கொண்டு யாரால் என்ன சொல்ல முடியும்? அவற்றொடு நாம் தொடர்பு வைத்துக்கொள்ள முயல்வது நமக்கு ஆபத்தாக முடியலாம். அமெரிக்காவுக்குக் கொலம்பஸ் போனதினால் அமெரிக்காவில் ஏற்கனவே இருந்த சிவப்பிந்தியர்களுக்கு ஆபத்தாக ஆனது போல' என்றார். ஹாக்கிங்.



உயிரினத்தின் கொடுமுடி என்று கொண்டாடப்படுகின்ற மனிதனின் பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட விஷயங்களும் இருக்கின்றன. இன்னும் விரிந்துகொண்டே போகும் பிரபஞ்சத்தின் (Universe) எல்லையின்மையைக் கருதும் போது, மனிதனின் இப்பொழுதைய ஆற்றலாகிய பகுத்தறிவு ஓர் அற்பமான விஷயம். பிரபஞ்சத்தில் 99% இன்னும் புரிந்துகொள்ள முடியாத 'இருண்மையான சக்தியாக' (Dark energy) இருக்கிறது என்பதை நினைக்கும் போது நமக்குத் தலை சுற்றுகிறது.

ஒருவனைப் பார்த்து, 'உனக்குக் கடவுள் நம்பிக்கை இருக்கின்றதா?' என்று கேட்பதும், அதற்கு அவன் 'உண்டு', 'இல்லை' என்று சொல்வதும் இரண்டுமே அபத்தமாகப் படுகிறது. 'உளன் எனில் உளன், அவன் உருவம் இவ்வுருவுகள், உளன் அலன் எனில் அவன் அருவம் இவ் வருவுகள்' என்று நம்மாழ்வார் கூறியிருப்பதே பொருத்தமான பதிலாகத் தோன்றுகிறது.

'கடவுள்' என்றால் என்ன?.

'இறை நிலை'க்குத் (God) தமிழில் 'கடவுள்' என்ற சொல் அமைந்திருப்பது போல் உலகில் வேறு எந்த மொழியிலாவது இருக்கிறதா என்று எனக்குத் தெரியாது. 'கடவுள்' என்றால் 'கடந்த நிலை' (transcendent) அதாவது, நம்முடைய தற்போதைய அறிவு நிலையைத் தாண்டி, இன்னும் புரிந்துகொள்ள வேண்டியன ஏராளமாயிருக்கின்றன என்று உணரும் நிலை. நாம் மேலும் மேலும் அறிந்துகொள்ள முயலும்போதுதான், நம்முடைய அறியாமையின் எல்லை நமக்கு விளங்கும். 'அறியுந்தொறும் அறியாமை கண்டற்றால்' என்பது குறள். இவ்வாறு அறிந்துகொள்ளும் முயற்சியில்தான், நமக்குள் இருக்கும் ஆற்றல்கள் கொஞ்சம் கொஞ்சமாக வெளி வந்து நமக்குப் புலப்படுகின்றன. இவ்வாற்றல்களின் அடையாளங்களாகிய விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் ஆகியவற்றின் வரலாறும் இங்குதான் தொடங்குகிறது.

மனிதனுக்கு உண்டான பகுத்தறிவு, பரிணாமத்தின் பலனா அல்லது எதேச்சையாக ஏற்பட்ட சம்பவமா அல்லது எல்லாவற்றையும் கடந்து இருக்கக்கூடிய பிரபஞ்ச ஒருமைப்பாட்டு பிரக்ஞையின் (universal unitary consciousness or cosmic super-intelligence) உந்துதலா என்பது பற்றி அறிஞர்களிடையே இன்னும் விவாதம் நிகழ்ந்து வருகிறது.

மனிதனின் சிந்தனை வளர்ச்சிக்கு உதவிய எந்த விஞ்ஞானக் கண்டுபிடிப்புமே எதேச்சையாக நிகழ்ந்தது என்ற கருத்தும் உண்டு.

ஆனால், ஆர்க்கமிடிஸ் தினமுந்தான் குளித்துக் கொண்டிருக்க வேண்டும்; அன்று மட்டும் தண்ணீர்த் தொட்டியிலிருந்து நிர்வாணமாகக் குதித்து ஓடி வந்து, ஒரு முக்கியமான பௌதீக விதியை அறிவித்ததாக ஏன் சொல்லப்படுகிறது? மரத்திலிருந்து விழுந்த ஆப்பில் அன்று மட்டும் நியூட்டனின் சிந்தனைப் பொறியை ஏன் ஊக்குவிக்க வேண்டும்? ஆகவே, இவை அனைத்தும் எதேச்சையான சம்பவங்கள் அல்ல; இவற்றின் பின்னணியில், ஓர் ஆக்கப் பூர்வமான ஓர் உந்துதல் சக்தி இயங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்று கூறும் விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள்.

இந்தச் சக்தியை எந்தப் பெயரிட்டு வேண்டுமானாலும் அழைக்கலாம். உலகிலுள்ள ஒவ்வொரு சமயமும் அதன் கோட்பாட்டுக்கேற்ப இந்தச் சக்திக்குப் பெயரிட்டுக் காண்கின்றனர். இந்தச் சக்தி நமக்குள்ளேயே இருக்கிறது.

நன்றாய் ஞானம் கடந்து போய்
நல் இந்திரியமெல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ்
உலப்பில் அதனை உணர்ந்து உணர்ந்து
சென்றாங்கு இன்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடு
அதுவே வீடு வீடாமே

என்கிறது திருவாய்மொழி.

இப்பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டுமானால், கொஞ்சம் நுண்ணணு பௌதீக அறிவும் (Quantum Physics) தேவைப்படுகிறது.

நம் ஐம்பொறிகளுக்குப் புலனாகும் பொருள்கள் திடப் பொருள்களாகவும் (அசித் -physical matter) காட்சிக்குப் புலனாகாத சக்தி அலை (சித் Energy-Probability waves) வடிவாகவுமிருக்கின்றன. கண்ணுக்குத் தெரியும் ஒரு நாற்காலி திடப் பொருள் அளவில் நாற்காலியாகவும், நுண்மையில், காட்சிக்குத் தெரியாத சக்தி அலை வடிவத்திலும் இருக்கின்றது. இதைத்தான் திருமூலர், 'மரத்தில் மறைந்தது மாமதயானை, மரத்தை மறைத்தது மாமத யானை' என்கிறார்.

ஒரு 'ப்ரோட்டான்' (proton) ஒரு சுழற்சியில் (orbit) காணப்படுவது, திடீரென்று மறைந்து இன்னொரு சுழற்சியில் அதே கணத்தில் தோன்றுவதை (மறைவுக்கும் தோன்றுவதற்கும் கால வித்தியாசமே இல்லாமல்) பார்க்கும்போது, வரையறைக்குட்பட்ட இடம், காலம் ஆகிய அனைத்தையும் கடந்து ஏற்படும் ஓர் அநுபவத்தை அநுமானிக்க முடிகின்றது. இந்த அநுபவந்தான் 'Unitary Universal Consciousness, Consciousness that is fundamentally what is' என்கின்றனர் டாக்டர் அமித் கோஸ்வாமி போன்ற அணுசக்தி வானவியல் விஞ்ஞானிகள் (Nuclear-Astro Physicists) கூறுகின்றனர். இந்நிலையில், பார்க்கின்றவர், பார்க்கப்படுகின்றவர் என்ற வேறுபாடு (duality) நீங்கி, அனைத்தும் நீக்கமற நிறைந்த ஒருமை (அல்லது யாதொரு வடிவமுமற்ற சூன்யம்) நிலையை அடைகிறது. இதுவே எல்லாவற்றையும் கடந்த 'கடவுள் அநுபவம்'. ஒரு கடல் அலையின் துளி தன்னைக் கடலாக உணரும் அநுபவம்.

இப்பொழுது. பாட்டைப் படியுங்கள். வரையறைக்குட்பட்ட இடம், காலம், ஐம்புல இன்பங்கள், பகுத்தறிவு, தர்க்கம் போன்ற ஞானத்தால் புலப்படும் விஷயங்கள் ஆகியவற்றைக் கடந்து, முடிவற்றதாகத்தோன்றும் திடப்பொருள் காட்சி நிலையாகிய அரும்பெரும் பாழையும் ('பாழ்' என்றால் 'தோற்றம்', 'பிரகிருதி' 'அசித்') தாண்டி, மனச் சலனங்களுக்குக் காரணமாகவும் காரியங்களாகவுமிருக்கிற இன்ப துன்ப உணர்வுகளைக் களைந்து, எல்லையின்மையின் ஒருமைப்பாட்டில் இரண்டற்ற தன்மையில் கலந்துவிடும் அநுபவமே விடுதலை (மோட்சம்), இறை அநுபவம்.

'பாழ்' என்பது அடிக்கடி ஆளப்படும் ஒரு சொல்.
சூழ்ந்து அகன்று தாழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ
சூழ்ந்து அதனில் பெரிய நன்மலர்ச் சோதீயோ!
சூழ்ந்து அதனில் பெரிய சுடர் ஞான இன்பமேயோ!
சூழ்ந்து அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே!

இங்கு 'பாழ்' என்பது முன்னர்க் கூறிய விஞ் ஞானக் கருத்தாகிய பிரபஞ்சத்தை 99% அளவில் சூழ்ந்திருக்கும் 'இருண்மை சக்தியை'யும் (Dark Energy) குறிக்கக்கூடும்.

ஆனால், இதனையும் மனித வாழ்க்கைக்கு அர்த்தப்படுத்திக் காணும் விதமாய், 'என் அவாவும் நானும் அற்றுப் போகும்படியாக,' 'சோதியாகவும்' 'இன்பமாகவும்' என்னுள் நீயும் நானும் கலந்துவிட்டோம்' என்கிறது இவ்வற்புதமான பாடல்.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

